வெளியீடு 2.

# "சிவலீலா."

(நாடகம்).

வெளியிடுவோர்

T. K. S. சகோதரர்கள்

M. S. B. S. சபா.

1942.



இதன் விலை] [அணா 8.

எமது அடுத்த வெளியீடுகள்

" ராஜா பர்த்ருஹரி "

" கலைமகள் " அல்லது " ஔவையார் "

ஸ்ரீ:

# சிவலீலா நாடகம்.

---

## முகவுரை.

"சிவலீலா" என்பது மங்கள மூர்த்தியாகிய பரம் பொருளின் ஆடல், என்று பொருள் தரும். அந்த ஆடல் படைத்தல் காத்தல் அழித்தல் என மூன்றாய்த் "திருவிளையாடல்" என வழங்கப்படும். அவற்றுள் இடைப்பட்ட காத்தல் சிறப்புடைத்து.

திருக்கயிலாயபதியாய் அழித்தற் கடவுளாய்க் "குலாவெண்டலைமாலை யென்பு பூண்டு .............. கொல்லேறேறிக்—கலாவெங் களிற்றுரிவைப்போர்வை மூடிக் கையோ-டனலேந்திக் காடுறைவார் ...... புலால் வெண்டலை யேந்திப் பூதஞ்சூழப் புக்கார்" என்று கூறும்படி நின்ற பரமனையும், "சடை மறைத்துக் கதிர் மகுடந்தரித்து நறுங்கொன்றையந்தார் தணந்து வேப்பந்தொடை முடித்துவிட நாகக்கலனகற்றி மாணிக்கச்சுடர்ப்பூணேந்தி விடை நிறுத்திக் கய லெடுத்து வழுதி மருமகனாகி" உலகம் காக்குமாறு மணமாலிகையொடு தன் மணிமகுடமுஞ் சூட்டிச் சோமசுந்தரனை மங்களமூர்த்தியாக்கிய பெருமை தடாதகைப் பிராட்டியாருக்கும் தென்பாண்டிநாட்டு மதுரைக்கும் உரியதாகும். இதுபற்றியே "சிவ மெனும் பொருளும் ஆதிசத்தியொடு சேரின் எத்தொழிலும் வல்லதாம்" என ஆன்றோர் கூறுவா ராயினர். இதனால், மதுரை திருக்கயிலாயத்தோ

டொப்பச் சிறந்ததென்பதும், கயிலாயத்துப் பரமன் சங்காரமூர்த்தியாய் வடமொழி வேதகானங் கேட்டெழுந்தருளியுள்ள நிலைபோல் மதுரையிலே சோமசுந்தரப்பெருமான் காக்கும் கடமையுடையராய்த் "திவ்விய மதுரஞ்சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூரிய செந்தமிழ் வேதகானங் கேட்டு மகிழ்ந்து வீற்றிருக்கும் நிலையும் சிறந்ததென்பதும் போதரும். இங்கு மதுரையைச் **சிவராஜதானி** யென்று வழங்குதலும் நோக்கத்தகும். மேலும் மதுரையின் பெருமை விரிக்கிற் பெருகும்.

இத்தகைப் பெருமை வாய்ந்த மதுரையிற் றிருக்கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள சோமசுந்தரப்பெருமான் தன் இன்னருளால் உயிர்கள் உய்யுமாறு நிகழ்த்திய திருவிளையாடல்கள் எண்ணிறந்தன. அவற்றுட் பெரியோர்களாற் சிறப்பாகப் பேசப்படும் திருவிளையாடல்கள் அறுபத்து நான்கென்ப, இவற்றால் உலகியல் பற்றியனவும் பாரலௌகிகமுமாய் நாம் அறிந்து கைக்கொண்டொழுகற் குரியநுண் பொருள்கள் பலவும் தெளிய விளக்கப் பட்டுள்ளன.

நற்புலமை மிக்க ஒரு சிலரே நூன்முகமாகக் கற்றும் கேட்டும் அறிந்து இன்புறத்தக்க இவற்றுள், சோமசுந்தரப்பெருமான் (1) பாணபத்திரற்கருளியதும், (2) தருமிக்குப் பொற்கிழி யளித்ததும், (3) சங்கப்புலவர் கலகந்தீர்த்ததும், (4) கல்லானைக்குக் கரும்பருத்தியதும், (5) வலை வீசியது

(சாபந்தீர்த்தது)ம் ஆகிய திருவிளையாடல்களையும், இறைவன் திருக்குறிப்புத்தொண்டர்க்கருளிய பெரிய புராண வரலாற்றையும் கல்வி கேள்விகளில்லாதோரும் கண்டு கேட்டு இன்புறும்படி மதுரை ஸ்ரீ பால ஷண்முகானந்த ஸபையார் (திரு T. K. S. சகோதரர்கள்) அழகிய சித்திரத்திரைகளாலும், இனிய ஆடல் பாடல் நடை நொடி பாவனைகளாலும் அத் திருவிளையாடல்களால் அறியவேண்டும் அரும் பொருள் பலவும் இனிது விளங்குமாறு நடித்துவந்த சிவலீலா நாடகம், மதுரைமாநகரவாசிகளும் பிறருமாகிய மக்களுள்ளங்கவர்ந்த செய்தி யாவரும் அறிந்ததே. இந்நாடகத்தைக் கண்ணுற்று மகிழ்ந்த புலவர் பெருமக்கள் பலரும் பாராட்டுரை வழங்கியுள்ளார்கள். இவ்வாறு கற்றோரும் மற்றோரும் வியக்குமாறு சிவலீலைகளை நாடகமாக்கி, முதன்முதல் அவற்றின் தத்துவார்த்தங்களெல்லாம் நன்கு விளங்கவும் ரஸபாவங்களோடு, அறமும் சமயமும் நிலையுறவும், பண்டு நிகழ்ந்தவை இன்று கண்கூடாய்க் காணுங் காட்சியாகவும், கதா பாத்திரங்களுக்கும் காலதேசங்களுக்கும் ஏற்ற ஆடல் பாடல் அபிநயங்களமைய நடித்துக்காட்டிய பெருமை மதுரை ஸ்ரீ பால ஷண்முகாநந்த ஸபையார்க்கே உரியதாகும்.

இங்ஙனம் நடித்தறிவுறுத்திய அச்சிவலீலைகளை யாவரும் படித்தும் உணருமாறு நாடகத்துக்கேற்ற முறையிற் பல களங்களும் காட்சியுமாக வகுத்தும் கதைகளை மரபு வழுவாது விரித்தும் ஒரு புத்தக

மாக்கி வெளியிடல் நலமென்று பலரும் விரும்பியதற்கிணங்கி அவ்வாறே இப்புத்தகம் மதுரை ஸ்ரீ பால ஷண்முகானந்த ஸபையாரால் வெளியிடப்பெற்றிருக்கிறது.

நாடகக்கலை வளர்க்கும் ஊக்கமெழுந்துள்ள இக்காலத்தில் அது தழைத்தோங்கும் வண்ணம் திரு. T. K. S. சகோதரர்கள் செய்துவரும் அரிய பெரிய நன்முயற்சி பாராட்டத்தக்கது.

இவர்கள் மேலும் இவ்வாறே நாடகக்கலை வளர்ச்சிக்கேற்ற துறையின் முயன்று சீருஞ் சிறப்பு மெய்தி வாழ எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிவானாக.

**T. C. சீனிவாசய்யங்கார், B.A., B.L.,**
***மதுரைத் தமிழ்ச்சங்கத் தலைவர்,***
28—1—42, மதுரை.

# " நான்முகம் "

பேரன்புடையீர், "சிவலீலா" என்னும் பெயரிய இந்நாடகம் எமது வேண்டுகோளுக்கிணங்க, சூலமங்கலம் பிரம்மஸ்ரீ " A. S. வைத்தியநாத பாகவதர் " அவர்களால் தொகுக்கப்பட்டு, நாடக மேடைக்கு வேண்டிய பல சீர்திருத்தங்களுடன் சென்ற இரண்டாண்டுகளாக எமது கம்பெனியில் நடிக்கப்பட்டு வருகின்றது.

இந்நாடகத்தில் பெரும் பகுதி திருவிளையாடற் புராணத்திலிருந்தும், சிறு பகுதி பெரிய புராணத்தி லிருந்தும் தொகுக்கப்பட்டுள்ளது.

" விறகு விற்ற திருவிளையாடலில்" "வடநாட்டு இசைப்புலவன்" எனத் திருவிளையாடற் புராணம் கூறுவதை நாங்கள் " சோழநாட்டு இசைப்புலவன் " என மாற்றி யமைத்தோம். எமது நாடகத்தைக் கண்ணுற்ற தமிழ்ப்புலவர்கள் சிலர் அவ்வாறு மாற்றஞ்செய்தது தவறெனக் கூறினமையால், அவர் தம் விருப்பத்திற்கிணங்க, புராணத்தில் கண்டவாறே நடிக்க இசைந்துள்ளோம். புத்தகம் அச்சாகிவிட்ட பின்னரே இது எமக்கறிவிக்கப்பட்டதால் புத்தகத்தில் மாற்றம் செய்யவியலாது போயிற்று. இந்நூலைப் படிக்கும் அன்பர்கள் "சோழநாட்டு இசைப்புலவன்" என்பதை "வடநாட்டிசைப்புலவன்" எனத் திருத்திக் கொள்ளவேண்டுகிறோம்.

நாடகக்கலை வளர்ச்சியை முன்னிட்டு நாங்கள் செய்யும் இத்தொண்டிற்கு தமிழ்மக்களின் அன்பையும், ஆதரவையும் வேண்டுகிறோம்.

இந்நாடக நூலுக்கு எமது வேண்டுகோளை மறுக்காது ஓர் முகவுரை எழுதி அன்புடனளித்த மதுரைத் தமிழ்ச்சங்கத்தலைவரும் வழக்கறிஞருமான "ஸ்ரீ T. C. சீனிவாசய்யங்கார்" அவர்களுக்கும், நாடகத்திற்கு சிறப்புரைகளும், பாக்களும், வழங்கிய பெரியார்கட்கும் எங்கள் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

Camp மதுரை 30—1—42. } T. K. S. சகோதரர்கள், M. S. B. S. சபா.

# முக்கிய அறிவிப்பு.

இந்நாடகத்தின் சகல உரிமைகளும் சட்டப்படி ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருப்பதால், இதிலுள்ள கதைகளை தனித்தனியாகவோ, அன்றி முழுமையாகவோ இக்கதைப்போக்கை அனுசரித்து வசனங்களை கூட்டியோ குறைத்தோ மாற்றியோ, நாடகமாய் நடிக்கவோ, பேசும் படமெடுக்கவோ, வானொலி பரப்பவோ, கூடாதென்பதை தெரியப்படுத்திக் கொள்கிறோம்.

# "சிவலீலா."

## அறிஞர்கள் புகழ்மாலை.

மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலை ஆசிரியர்
சு. நல்லசிவன் பிள்ளை அவர்கள்

எண்சீர்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

... பாண்டியர்செய் தவப்பயனாற் பரமன் பாண
பத்திரன்ற னடிமையெனப் பாரோர் காண
வேண்டுவிற கெடுத்துவிலை பகர்ந்தும் வேத
வித்தகனும் தருமியெனும் மேலோ னுக்கங்
கீண்டியபொற் கிழியளித்தும் கீரன் றன்னை
...சிலஞ்சியினின் றுங்கரைமீ தேற்று வித்தும்
பூண்டசங்கத் தார்கலகம் ஊமன் றன்னால்
போக்கியுங்கல் லானைகன்னல் புசிக்கச் செய்தும்,

பரதவன்றன் வடிவாகி வலைகைக் கொண்டு
பகாரிய மீன்படுத்தும் பரிவிற் செய்த
புரதகனன் விளையாட்டும் அவன்றன் கூத்தும்
புவனமெலாம் ஈன்றசத்தி புரியும் கூத்தும்
விரதமுனி வரர்விபுதர் உரகரேனோர்
விழைந்துதவம் புரிந்திடினும் மேவுறாத
சரதமுறு சிவலீலை புரிஸ்ரீபால சண்முகா
னநதசபை தனிற்கண்டோமே.

சிவபத்தி அடியார்பத்தி சிறந்தகச்சித்
திருக்குறிப்புத் தொண்டர்பத்தித் திறனைக் கண்டு
நவபத்தி யுங்கிளுளோ ரடையும் வண்ணம்
நடித்தகர் டகத்திறனை நாமென் சொல்கேம்

பவசத்தி தனையகற்றும் நெறிகைக் கொண்ட
பண்புறுநர் டகசபையின் பால சிலர்
தவசத்தி யுறுதலைவர் தூய பால சண்முகா
னந்தசபை தழைத்து வாழி.

---

## மதுரை அமெரிக்கன் கல்லூரித் தமிழாசிரியர்
## ஆ. கார்மேகக் கோனார் அவர்கள்

நிலைமண்டில ஆசிரியம்.

இறையனார் முதலா எண்ணரும் புலவோர்
முறைமுறை யாக முந்துற விருந்து
அமிழ்தினு மினிய தமிழா ராய்ந்த
சங்க மிருந்த துங்கமும் முந்தை
நண்டிய புகழ்சேர் பாண்டியர் ஆண்ட
மாண்பும் இறைமையும் காண்டகு காட்சியும்
கொண்டினிது விளங்கிய கூடல்மா நகரில்
ஆலவாய் அவிர்சடைப் பெருமான் அன்று
சாலவே மன்பதை தாமுய்ந் திடற்கு
அருளொடு புரிந்த திருவிளை யாடலுள்
ஒருசில வற்றை உருவுடன் தொகுத்து
இந்த நாள்தனில் இந்நகர் வாழும்
மக்கள் யாவரும் மகிழ்ந்துகண் டின்புற
ஆடலும் பாடலும் அபிநய வகைகளும்
பீடுறும் எழினியின் பிறங்கொளி நலங்களும்
சாலவே அமையப் பால சண்முகா
னந்த சபையார் நலமுடன் புரிந்து
நூற்றெட்டு நாட்களும் நுவலருஞ் சிறப்பொடு

## குமாரகவி திரு. மு. நாராயணசாமி பிள்ளையவர்கள்

வெண்பா.

நவரசங்கள் மேவுமுயர் நாடகப்பண் பால்முன்
தவமுனிவர்க் கேற்றவரந் தந்தோன்—சிவபெருமான்
செய்தவிளை யாட்டெல்லாந் தெள்ளமுதென் றேயளிக்கு
மெய்ச்சிவலீ லாபொன்று மே.

---

## திரு. P. பாஸ்கரையர், தமிழாசிரியர் A. R. H. S. மதுரை

வெண்பா.

தண்டமிழார் கூடலிறை தந்தவிளை யாடலொடு
தொண்டர்புரா ணத்திலொரு தொண்டர்கதை-கொண்
சிவலீலா நாடகத்தின், சீர்த்திதனைப் பாரார்
பவலீலா, நீங்காரென் பேம்.

---

## பண்டித. ஆ. சிவசுப்ரமண்யன் தமிழாசிரியர்
## ராமேஸ்வரம் தேவஸ்தானம் வடமொழிக்கல்லூரி, மதுரை

கட்டளைக்கலிப்பா.

பாடல் சான்ற மதுரைப் பதியினிற்
பரமனார் செய் திருவிளை யாடலுள்
ஆடல் சான்றவை கூத்துறக் காட்டிய
ஆற்றல் கண்டுசங் கத்தவர் முத்தமிழ்
கக்கலா வித்துவ ரத்நமென்
நற்பெரும்பட்டம் நல்கச் சிறந்திட்ட
தேட ரும்புகழ் டி. கே. எஸ். சோதரர்
செய்த மாதவத் துத்தமச் செல்வரே.

## திருவனந்தபுரம் இசைச்செல்வர்
## திரு. தி. லக்ஷ்மண பிள்ளை அவர்கள்.

டி. கே. எஸ். & சகோதரர்கள் மதுரையில் நடத்தி வருகிற நாடகங்களில் 'சிவலீலை' என்னும் திருவிளையாடற்புராணக்கதை நடித்ததை நான் கண்ணுற்று மிக மகிழ்ந்தேன். நடிப்பு முறைகளில் எல்லா அம்சங்களும் போற்றத்தக்கனவாக இருந்தன. இவ்வாறு வேறு அநேக கதைகளையும் இவர்கள் நடித்து மகா ஜனங்களை ஆனந்திப்பித்து வருவதாக அறிகிறேன். நாடகப்பாத்திரங்களாயுள்ளவர்கள் இனிய செந்தமிழ் நடையிலும் யாவரும் எளிதில் உணர்ந்துகொள்ளும் விதத்திலும் பேச்சு நடத்துவதைக்கேட்டு உவகை கொண்டேன். காட்சிப்படங்கள் மனதைக் கவர்ந்து கொள்ளும் சிறப்புடையன. சாகித்தியமும் சங்கீத மெட்டுக்களும் மெச்சத்தக்கன. நாடகம் நடத்துகிற ஒழுங்கும் நடபடிக்கைகளும் T. K. S. Brothers னுடைய நுண்ணறிவையும் நல்லொழுக்கத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்குவன. அவர்களுடைய இந்த வியக்கத்தக்க முயற்சி இன்னும் மேம்பாடுற்று இனிய தமிழ் வளர்ச்சியையும் தமிழ் இன்னிசை வளர்ச்சியையும் உண்டாக்கி தமிழுலகிற்குப் பேருதவி யளிக்குமென்று நான் உறுதியாய் நம்புகிறேன்.

நாற்றிசை போற்ற நடித்திட்ட காட்சியை
என்னென் றியம்புவோம்! இந்நக ரெல்லாம்
எண்ணும் எண்ணமும் இயம்பும் சொல்லும்
**சிவலீலையே! சிவலீலையே!!**
ஒளித்திரைக் காட்சியால் ஒழிந்து போனதோர்
களிப்புறு நாடகக் கலையைமீண் டுயிர்ப்பிக்கப்
பால சண்முகா னந்த சபையார்
ஆற்றும் பணிகள் போற்றும் பணிகளே
இத்தகைத் தொண்டினும் இன்றமி ழுக்குச்
சித்தங் கொண்டு செய்திச் சபையின்
நடிகரும் இதனை நடாத்தும் தலைவரும்
உடல்நலத் தோடு உயர்வாழ் வுறவே
அனகன் றிருவடிப் போதெப் போதும்
மனமொழி மெய்களால் வணங்குதும் நாமே.

---

**மதுரைத் தமிழ் வித்வான்**
**ஸ்ரீ. நா. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள்**

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியம்.*

முச்சங்கம் நிறுவியதில் முத்தமிழை
    நனிவளர்த்த மூதூரான
மெச்சுபுகழ் மதுரை ஸ்ரீ பாலசண்மு
    கானந்த சபையார்மிக்க
உச்சிதமா சிவலீலை உகந்துநடத்
    திடப்பார்த்தோம் உணருங்காலை
இச்செகத்தில் புதுமைபல இருப்பினுமோர்
    புதுமையிதென் றியம்புவாமே!

உலகமெலாம் பனித்துளிக்குள் உருவகுத்துக்
காட்டுதல்போல் உண்மையாக
இலகுதிருக் கைலாயம் ஈசன்உமை
யானைமுகன் இளையகந்தன்
அலகுபெறு சிவகணங்கள் யாவரையும்
அரைநொடிக்குள் ஆங்கேகாட்டும்
நலமிகுந்த சீன்சிறப்பின் நனிமுறை
நவிலுதற்கோர் நாப்போதாதே!

வேதமுடி மீதிருக்கும் வித்தகனார்
தம்முடியில் விறகு தாங்கி
நாதவொலி பரப்பிவரும் நாடகத்தை
நாடகத்தில் நாங்கள்கண்டோம்
பாதமுதல் உச்சிவரை பரவசமுற்
றவனருளைப் பருகி நின்றோம்
ஓதவிதற் கொப்புவமை உளமறிவ
தன்றியெடுத் துரைக்கொணாதே!

சொக்கர்பிரான் தருமியெனும்
தொண்டனுக்காய் அரியகவி தொடுத்தங்கேவ
நக்கீரன் குற்றமென நவின்றிடலும்
சங்கமதில் நாதன்தோன்றி
அக்கீர னுடுவாதம் ஆடியதும்
எட்டிலன்றி ஆரே கண்டார்!
தக்க டி. கே. சங்கரன்ச கோதரர்ச
பாவின்று தான்கண்டோமே!

உம்பரொடு பதஞ்சலியார் உயர்ந்தவியாக்
கிரர்முதலோர் உகந்துநோக்கும்
அம்பலத்தார் ஆடலதை அருள்நிறைந்த
ஒருசிலரே அறிந்தாரன்றி
"இம்பர்மிசை கண்டவரார்! இல்லை"
யெனுங் குறைநீங்க எம்மோர் இன்னே
நம்பகமாய்ப் பரனுமையார் நடங்கண்டு
களிப்படைந்தோம் நனிமிந்நாளே!

சிவபெருமான் கூடலின்கண் செய்ததிரு
விளையாடல் செப்புங்காலை
ஏவரறிவார் பரஞ்சோதி எழுதிவைத்த
ஏட்டிலவை இருப்பதன்றி?
பவம்விலகிப் புனிதமுற மதுரைஸ்ரீ
பாலசண்முகானந்தப்பேர்
சவை நடித்துக் காட்டினதால் சங்கீத
வமுதினையுஞ் சார்ந்துண்டோமே!

வல்லானென் றிசைப்போர்க்கு வந்தவனை
யோடவிட்ட மகிமைகண்டோம்
கல்லானை உண்பதற்குக் கரும்பளித்த
பெருங்காட்சி கண்டோம் ஆங்கே
இல்லாரை உண்டாக்கி இருந்தாரைக்
கண்மறைத்த இயல்புகண்டோம்
எல்லாஞ்செய் திடற்குரிய ஈஸ்வரனார்
விளையாடல் என்னே! என்னே!!

பேர்சிறந்த டி. கே. எஸ். பிரதரிவர்
நடிப்புமுறை பேணுங்கீதம்
சீர்சிறந்த செந்தமிழ்ப்பா செவிக்கினிய
வசனநடை தேனே பாலோ!
ஓர்சிறந்த தெள்ளமுதோ உண்ணஉண்ணத்
திகட்டாமல் உளமுற்றாறும்
பார்சிறந்த முப்பழத்தின் பாகமுதோ
அத்தனையும் பகரலாமே!

தனி மதுரை ஸ்ரீ பால சண்முகா
னந்தசபை தரணி மீது
கனிமதுர நவரசநற் கண்காட்சி
சங்கீதம் கலந்துதோன்ற
மனிதர்குலம் மகிழ்வடைய மாபெரிய
சரிதமெலாம் வகுத்து மேலாய்
இனிதிருந்து நடத்திடுக! இருநிலமிங்
கிருக்கும்வரை இசைந்துமாதோ!

மதுரை திருவள்ளுவர் நிலையம், கவிராஜ பண்டி.
ஜெகவீர பாண்டியனார் அவர்கள்

எழுசீர் ஆசிரிய விருத்தம்.

உலகுயிர் உய்ய ஒளிர்சிவம் நடித்த
உயர்சிவ லீலையை இன்றித்
தலமுயர் பால சண்முகா னந்த சபையினர்
சதுரடன் நடிக்கும்

நிலையெதிர் கண்டார் நிறை நலம் கண்டார்
நித்தலும் சிவனருள் நினைந்து
நலமுயர் பக்தி நிலைமிகப் பெற்று
நானிலம் இன்புற வாழ்வார்.

## ஸ்ரீ மதுர பாஸ்கரதாஸ் அவர்கள்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியம்.

நவலீலை யாடகந்தேர் கூடலிலே சுந்தரனார்
நடித்துப் பக்தர்
பவலீலை போக்கியதோர் விளையாடல் ரஸமனைத்தும்
பருகத் தக்க
"சிவலீலை" நாடகமா யாடியன்ப ருள்ளமெல்லாம்
சிலிர்க்கச் செய்தார்
தவலீலைப் பாலக ஸ்ரீ சண்முகா னந்த மகா
சபையார் தாமே!

தீர்க்கமுடன் நூற்றெட்டுத் தினங்களிதே சிவலீலைத்
திருவிழாவைப்
பார்க்கவரும் பேர்களித்தோ ராயிரத்தெட் டான பதிணையட
[illegible]ணிந்த பாக்கியம்
வைக்கு[illegible]றக் கிடைத்ததென்றே கூறுகின்றார் நந்நெறியி
லுயர்ந்தோரெல்லாம்
ஆக்கமிகும் ஸ்ரீ பாலு சண்முகா னந்தசபைக்
கரும் பேறீதே

இயலிசைக்குப் பிறகுவைத்த நாடகத்தை முதன்மை
எடுத்துக் காட்டிச்
செயலிசைக்கும் நவரஸங்க ளுடன் பலமெய்க் காட்சி
சிறப்பாய்த் தோன்றக்
கயலிசைக்கண் ணம்பிகையாள் மதுரைநகர்ச் சனசமு
களிப்பேகூர
மயலிசைக்கும் ஸ்ரீ பால சண்முகா னந்த சபா
வாழ்க மன்னோ

சங்கரன் முத்துச்சாமி சண்முகனும் பகவதியாம்
சகோதரர் தாம்
பொங்கரவம் புனைந்தபிரான் திருவருளாற் பல நலமுட
பொருந்தி வாழ்க
இங்கிதமும் குண நெறியும் தவறாத சதுர ரிவர்
இனிதாய் வாழ்க
மங்களமும் நிறைமதியும் நவநிதியும் ஓங்கி யென்றும்
வாழ்க மாதோ!

---

**உயர்திரு. ச. சோமசுந்தர பாரதியாரவர்கள் M. A. I**

டி. கே. எஸ். சகோதரர்களின் மதுரை ஸ்ரீ பாலசண்முகானந்த சபையார் நடத்தும் சிவலீல என்னும் நாடகத்தைப் பல நண்பர் பார்த்துவந்து புகழ்ந்ததைக்கேட்டு 26—10—41ல் நானும், என் குடும்பத்தாரும் போய்ப்பார்த்தோம். நன்றாயிருந் தது என்று சொல்லுவது நான் அனுபவித்த உணர்ச் சியை விளக்கப் போதாது. தற்காலம் நடிக்கப்படு தமிழ் நாடகங்கள் குலப்பெண்டுகளோடு கண்டு

களிக்கக் கூடாததாயும், கல்லாத மாந்தர்க்கன்றி நல்லோர் உவக்கக்கூடாததாயும் இருந்து வருவதால் சுமார் 40 ஆண்டுகளாக நான் ஒரு தமிழ் நாடகத்தையும் பார்க்காமல் வெறுத்திருந்தேன். "சிவலீலா"வைக் கண்ட பிறகு தமிழரும் நல்ல முறையில் அறிவுடையார் மகிழ, கண்டார் மனதில் அறநிலைகள் உறைக்க, இன்பமும் உணர்வும் ஒன்றி உவக்க நடர்கள் தமிழில் நாடகம் நடத்தக் கூடுமென்று நம்பலானேன். இதில் நடித்த நடர்களெல்லாம் நல்ல சொற்பயிற்சியும் எளிய, இனிய நடைவன்மையும், கதாபாத்திரங்களுக்கு மிகவும் பொருத்தமாய்க் காலயிடங்களைச்சாலத்தழுவி நடிக்கவும் பேசவும் நன்ருகப் பயின்றுள்ளார்கள்.

அவரவர் நிலையில், அவரவர் நடிப்புச் சிறந்திருந்தது. இவ்வாறு சமயக் கதைகளை வழுவற நடித்துச் சான்ரேர் மகிழச் செய்வதால் சமயத்தில் அன்பும் மதிப்பும் வளர்வதாகும். காதலின்பமும் தூயமுறையில் காட்டப் பெற்றது. காட்சிகளெல்லாம் இயற்கையின் மாட்சி தோன்ற இனிது சமைக்கப்பட்டிருந்தது. அசாதாரண கடவுட் செயல்களை நிகழ்வன போல நேரிற் காட்டி, பார்ப்பவரெல்லாம் பரவசப்படுமாறு அமைத்திருந்த அழகு வியக்கத்தக்கது. இசையொடு நிறைந்த இன்சுவைப் பாட்டுகள் ஒவ்வொரு நடரும் பாடிய சிறப்பு உணர்வைக் கொண்டது. ஐம்பொறிகளையும், அறிவையும் ஈர்த்து ஒப்பக் களிக்கச் செய்த இந்நாடகத்தை எல்லாரும் வியந்து புகழ்வது இயற்கையாகும். இத்தகைய நல்ல கதைகளை நாடகமாக்கி நடித்துத் தமிழரை அறிவும் ஒழுக்கமும் இன்ப

முறையில் எளிதில் உணர்த்தி இச்சபையார்கள் புகழோடு செல்வம் பெருக அருளுமாறு இறைவனை இறைஞ்சுகின்றேன்; சபையோருக்குப் பல்லாண்டு கூறி வாழ்த்துகின்றேன்.

## மதுரை கே. லெக்ஷ்மி பார்தி, எம். எல். ஏ.

இச்சபையார் நடத்திவருகிற சிவலீலா நாடகத்தை மும்முறை பார்த்தேன். இன்னும் எத்தனை முறை பார்த்தால் திருப்தியடைவேன் என்று சொல்வதற்கில்லை. தெவிட்டாத தெய்வ அமிர்தம் என்றே சுருங்கக் கூறுவேன். தமிழை அமிழ்துக்கு ஒப்பிட்டது இதனால்தான் போலும். தெய்வ பக்தியின் மேன்மைகளைப் பரப்புவது இந்த நாடகம். தமிழ் மொழியைத் தழைத்து ஓங்கச் செய்வது இந்த நாடகம். பார்க்கும் தோறும் உள்ளத்தை உயர்த்துகிறது. கண்ணைக்கவரும் காட்சிகள்! உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பேச்சு! செவிக்கினிய பாட்டு!! மனதை இழுக்கும் சிவபெருமான் திருநடனம்! பார்த்து அனுபவிக்க வேண்டிய இந்த நாடகத்தை எழுத்தில் புகழ்வது எங்ஙனம் இயலும்? மக்களுக்குப் பயன்படும் இத்தகைய நாடகங்களை நடத்திப் பேரும் புகழோடும் சீரும் சிறப்போடும் இச்சபையார் வாழ்ந்து ஓங்கி வளம்பெற வளரவேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

## தமிழ்நாடு, காங்கிரஸ் தலைவர் ஜனாப் உபயதுல்லா அவர்கள்

இவர்கள் தேர்ச்சியாக நடத்திவரும் "சிவலீலா" நாடகத்தை இரண்டு முறை பார்த்தேன். மிகவும் நேர்த்தியாகவும், நடிகர்கள் திறமையாகவும், வாக்குச் சுத்தத்தோடும் இசைவன்மையோடும் நடிப்பின் பாவத்தோடும், நன்ருக நடிக்கும் தன்மை மிகவும் போற்றத்தக்கதாக இருந்தது, சரித்திரத்தின் தன்மை, போக்குக்கு ஏற்றாற்போல, காக்ஷிக்கு அழகான படுதாக்கள் வர்ண தட்டிகள் மிக, மிக, அமைப்பாக இருந்தது. மணிக்கணக்காகப் பார்ப்பதில் சலிப்புத் தட்டவில்லை, இப்பொழுது நவீன முறையில் பல சினிமாப்படங்கள் மதுரைநகரில் நடந்துவரும்போதும் ஒரே கதையை நூறு தினங்கள் நடத்திய பிறகும், ஜனங்களின் உற்சாகம் குன்றுது. கூட்டம், கூட்டமாக, பார்த்து வருவது ஒன்றே, இக்கம்பெனியின் திறமையை மெய்பிக்கிறது. கம்பெனியாரின் நல் முயற்சி நன்ருக வளர்ந்து, தமிழுக்கும் தமிழ் நாகரீகத்திற்கும் நாடகக் கலைக்கும், வளர்ச்சியும், பாதுகாப்பும் ஏற்பட ஆண்டவனை பிரார்த்திக்கிறேன்.

**Mr. J. M. Doak, Managing Director The Madura Mills Co. Ltd. Madura.**

Mrs. Doak & I are grateful to Messrs. T. K. S. & Bros for giving us an opportunity to attend the Centenary Celebration of the Drama "Siva Leela" yesterday.

It was an amazing experience, for surpassing any other Tamil Drama we have ever seen. The stagecraft, settings, costumes & above all the spirited acting breathed the spirit of Madura. Madura is fortunate in having such talent & I trust Messrs. T. K. S. & Bros. will go on here from success to Success.



## செட்டி நாடு குமாரராஜா
## சர்., மு. அ. முத்தையா செட்டியார் அவர்கள்.

பாடல் பெற்ற திருஆலவாயில் பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் கண்டு களித்த விதத்தில் சிவபெருமானின் 64 திருவிளையாடல்களையும் கொண்டதும் முத்தமிழ் சங்க உறைவிடமானதுமான மதுரையம் பதியில் பிரபல நடிகர்களான முத்தமிழ் கலாவித்வ ரத்ன டி. கே. எஸ். சகோதரர்களின் மதுரை ஸ்ரீ பாலஷண்முகானந்தசபையாரால் நடத்தப்பெற்ற "சிவலீலா" என்னும் புண்ணிய திவ்ய சரித்திரத்தை அதன் நூறாவது தினத்தன்று கண்டுகளிக்கும் பாக்கியம் எனக்கு கிடைத்ததைப்பற்றி மட்டற்ற மகிழ்ச்சியடைந்தேன். இந்நகரிலே இந்நாடகம் இடைவிடாது நூறு தினங்களுக்கு மேல் நடைபெற்றதே இந்நாடகத்தின் சிறப்பை பன்மடங்கு உயர்த்துகின்றது.

இதில் நடிக்கின்ற எல்லா நடிகர்களும் மிகவும் திறமையுடன் அவரவர்கள் பாத்திரத்திற்கு ஏற்றவாறு நடித்தது இனிது பாராட்டத்தக்கது. மேலும் இவர்கள் பாடும் ஒவ்வொரு பாடல்களும் எளிதில் சகல மக்களும் உணருமாறு இனிமையாக இருந்தது. பல்லாயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன் நடைபெற்ற சிவபெருமானின் லீலைகளை இன்னும் மக்கள் பக்தி ரசத்துடன் கண்டு களித்து ஆனந்தத்துடன் அனுபவிக்கவும் இச்சபையினர் தங்கள் நாடகங்கள் மூலமாய் தமிழ் இசைக்கும் தமிழ் கலை வளர்ச்சிக்கும்

செய்யும் தொண்டும் மிக மிக போற்றற்பாலது. நாடகமேடையே ஒருவாறாக குன்றியுள்ள இந்த சமயத்தில் மென்மேலும் நாடகக்கலையை இனிது வளர்த்து தமிழுக்கும் தமிழ் இசைக்கும் தொண்டு புரிய இச்சபையினர் எடுத்துக்கொண்ட முயற்சி மிகவும் போற்றத்தக்கது.

இச்சபையினருக்கு நீண்ட ஆயுளும் நிறைந்த ஆற்றலும் சகல நலன்களும் நல்குமாறு எல்லாம் வல்ல இறைவனை மனமுவந்து பிரார்த்திக்கிறேன்.



# "சிவலீலா" நாடகம்.

## பாத்திரங்கள்.



| | |
|---|---|
| சிவபெருமான் | "முழுமுதற் கடவுள்" |
| விநாயகர்<br>முருகன் | எம்பிரான் புதல்வர்கள் |
| நந்தி தேவர் | எம்பிரானூர்தி |
| சநகாதியர் | முனிவர்கள் |
| நாரதர் | பிரம்மபுத்ரன் |
| குண்டோதரன்<br>சங்குகர்ணன் | பூதகணங்கள் |
| வரகுண பாண்டியன்<br>செண்பக பாண்டியன்<br>அபிஷேக பாண்டியன் | மதுரையம்பதியின் மன்னர்கள் |
| ஹேமநாதன் | சோழநாட்டு இன்னிசைப் புலவர் |
| பாணபத்ரர் | பாண்டிநாட்டுப்புலவர் |
| நக்கீரர் | தமிழ்ச்சங்கத் தலைவர் |
| கபிலர்<br>பரணர் | சங்கப்புலவர்கள் |
| தருமி | ஓர் ஏழை பிரம்மச்சாரி |
| திருக்குறிப்புத் தொண்டர் | ஓர் ஏகாலியார் |
| உமாதேவி | "முழுமுதற் சக்தி" |
| மங்கையர்க்கரசி | பாணர் மனைவி |

| | |
|---|---|
| பூங்குழலாள் | பாண்டியன் தேவி |
| மாரியம்மை | தொண்டர் மனைவி |
| முருகு | தொண்டர் மகள் |
| கயற்கண்ணி | வலையர்க்கரசன் மகள் |

மற்றும் சிஷ்யர்கள், முனிவர்கள், பூதகணங்கள் தேவர்கள், காவலர்கள், கோவில் குருக்கள், குடிகள் ஏனையோருமுண்டு.

கதை நிகழிடம் = பெரும் பகுதி மதுரையம்பதியிலும் சிறு பகுதி கைலாயத்திலும்.

# "சாபங் கொடுத்த படலம்"

## களம் 1. காட்சி 1.

**இடம்:— கைலாயம்**

**பாத்:—** [சிவபெருமான், பார்வதி, கணபதி, முருகன், நந்தி, நாரதர், சநகாதியர், பூத கணங்கள், தேவர்கள், முனிவர்கள்]

**குறிப்பு:—** [சிவபெருமான் உமையவளோடும், புதல்வர்களோடும், புலித்தோலாசனத்தின் மீது வீற்றிருக்க, ஏனையோர் இருமருங்கிலும் நின்று பக்திப் பரவசத்துடன் பாடுகின்றனர். பாடல் முடிந்ததும் எம்பிரான் கனிந்த உள்ளத்துடன்]

**சிவபெரு:—** சநகாதி முனிபுங்கவர்களே! இன்று நீங்கள் எம்மிடத்துச் செலுத்திய "பக்தி" வெள்ளம் எம்முள்ளத்தை ஆட்கொண்டுவிட்டது. மிகவும் மன மகிழ்வுற்றோம். இச்சமயம் உங்களுக்கு ஏதேனும் மனக்குறைகளிருப்பின் அதனை நிறைவேற்றி வைக்கச் சித்தமாயிருக்கின்றோம். மனோ வாக்கு காயங்களால் எம்மை வணங்குபவர்களுக்கு யாம் எதையுமளிப் போம்.

**சநகாதி:—** ஹே பரம்பொருளே! அடிக்கடி இங்கு வந்து தங்களுடைய நிறைந்த அன்புக்குப் பாத்திரர்களாயிருக்கும் எங்களுக்கு, தங்கள் திரு வடிக்குத் தொண்டு செய்தலையன்றி வேறு விருப்ப மேது? அநேக சாத்திர, புராண, இதிகாசங்களின்

உட்பொருட்களை யெல்லாம் சமூகத்திலிருந்தன்றோ தெள்ளத்தெளியத் தெரிந்துகொண்டிருக்கின்றோம். ஆனால், ஒரு சிறு குறையுண்டு. அதாவது, வேதங்களால் நிர்ணயிக்கப்படுகிற தத்துவத்தை ஏற்கனவே தங்கள் திருவாக்கினால் கேட்டிருந்தும், இன்னும் விளக்கமாய் அறிந்துகொள்ள எங்களால் முடியவில்லை. அதற்கு எங்களுடைய அக்ஞானம் தான் காரணம். ஆகவே அடியார்கள் பால் அன்பு கூர்ந்து மற்றோர் முறை அத்தத்துவத்தை உபதேசிக்குமாறு வணக்கமாய்க் கேட்டுக்கொள்ளுகின்றோம்.

முனிவர்:— ஆம். மகாதேவா! தயை செய்ய வேண்டும்.

சிவபெரு:— (புன்னகையுடன்) முனிவர்களே! நீங்கள் கூறியது உண்மையே. வேதத்தின் தத்துவங்களை எத்தனை முறை கேட்கினும் அதனை நிர்யணித்துக்கொள்வது சிரமந்தான். ஆயினும், உங்கள் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கின்றோம். பூலோகத்தில் "துவாத சாந்த க்ஷேத்ரம்" என்று பெயர் பெற்று விளங்கும் "திருவாலவாய்" என்னும் புண்ய பூமியில் மற்றோர் முறை இத்தத்துவத்தை நீங்கள் எம்மால் அநுபவபூர்வமாகத் தெரிந்துகொள்ளக்கடவீர்கள்.

எல்லோரும்:— சம்போ மகாதேவா!

சநகாதி:— பரமேசா! சித்தப்படி காத்துக் கொண்டிருக்கின்றோம். தங்கள் திருவிளையாட்டினை யாரே அறிய வல்லார்? தாங்கள் எங்கும் நிறைந்த பரம்பொருளன்றோ!

**எல்லோரும்:—** சம்போ மகாதேவா ! மகா தேவா !!

(எல்லோரும் தலை வணங்குகின்றனர்)

(காட்சி முடிவு.)

## களம் 1. காட்சி 2.

### இடம்:— காடு.

**பாத்:—** [நாரதர், சநகாதியர், குண்டோதரன், சங்குகர்ணன்]

**குறிப்பு:—** (சநகாதியரும், நாரதரும் பேசிக் கொள்ளுதல்)

**சநகாதி:—** நாரதரே ! எம்பெருமான் "ஆலவாய் பதி"யில் அநுபவபூர்வமாகக் காண்பிக்கிறேனென்று சொன்னாரே, அது விஷயமாய் எங்களுக்குக் கொஞ்சம் சந்தேகம் உண்டாகிறது. அதாவது, தில்லையம்பதி, ஸ்ரீ காளஹஸ்தி, திருவானைக்காவல், காஞ்சீவரம், திருவாரூர், முதலான அநேக புண்யதலங்கள் இருக்கின்றதாகக் கேள்விப்பட்டிருக்கின்றோம். அவற்றை யெல்லாம் பரமன் குறிப்பிடாமல் இந்த மதுரை யம்பதியை மட்டும் விசேஷமாய் குறிப்பிட்ட காரண மென்ன?

**நாரதர்:—** (நகைத்து) சநகாதி முனிவர்களே ! என்னை விடப் பலவகையிலும் மேம்பாடுடைய உங்களுக்கு, நான இதற்குக் காரணம் கூறவேண்டும் ?

**முனி:—** நாரதரே! நீர் கூறியது உண்மைதான். ஆயினும், நாள் தோறும் மூன்று லோகங்களுக்கும் சென்று வந்துகொண்டிருக்கிற உமக்குத்தான் இதன் மாறுபாடுகள் நன்றாய்த் தெரிந்திருக்குமெனக் கேட்டோம். நாங்கள் இருந்தவிடத்திலேயே இருந்துகொண்டு "சொரூபத்யானம்" செய்துகொண்டிருப்பவர்கள்தானே.

**நாரதர்:—** ஓஹோ, அப்படியா!

[சங்கொலி முழங்குகிறது. முனிவர்கள் திரும்பிப் பார்க்க, குண்டோதரனும், சங்குகர்ணனும் வருகிறார்கள்]

**குண்டோ, சங்கு:—** முனிபுங்கவர்களே! நமஸ்காரம்.

**நாரதர்:—** வாப்பா, குண்டோதரா! நல்ல சமயத்தில் நீயும் வந்தாய்.

**குண்டோ:—** அப்படியா!

**நாரதர்:—** மகரிஷிகளே! ஏதோ தெரிந்தமட்டிலும் சொல்லுகிறேன். க்ஷேத்திரங்களில் சகுணம், நிர்க்குணம் என்று இருவகைப்படும். சகுண க்ஷேத்ரங்கள் நூற்றுக்கணக்காய் இருக்கின்றன. நிர்க்குண க்ஷேத்திரம் ஒன்றேயொன்றுதான். அதற்குத்தான் திருப்பெருந்துறை யென்றும், ஆளுடையார் கோயிலென்றும் பெயர். சகுண க்ஷேத்ரங்களில் ஷடாதார க்ஷேத்ரங்களாய் விளங்குகின்ற ஆறில் உயர்ந்த க்ஷேத்ரம் மதுரையம்பதிதான். பரமன் உமாதேவியை

மணந்துகொண்டு "சுந்தர பாண்டியன்" என்ற பெயருடன் அரசு புரிந்தது அந்த மதுரையிலேதானே!

**குண்டோ:—** (களிப்புடன்) நாரதரே! மதுரையம்பதியைப்பற்றிச் சொன்னவுடன், எனக்கும் பழைய ஞாபகங்களெல்லாம் வந்துவிட்டது. ஆஹா ஹா! என தம்மையின் திருமணம் நடைபெற்றபோது... (ஆனந்தக்கூத்தாடி) நாரதரே! உமக்குத்தெரியுமா?

**நாரதர்:—** (ஒன்றுமறியாதவர்போல்) என்ன அது?

**குண்டோ:—** அந்தக் கல்யாணத்திலேதான் என்னப்பன் எனக்கு வயிறு நிறையச் சோறுபோட்டது.

(குண்டோதரனும், சங்கு கர்ணனும் நகைக்கிறார்கள்.)

**நாரதர்:—** அடேயப்பா, இது ஒரு அதிசயமா?

**குண்டோ:—** என்ன நாரதரே! ஒன்றுந்தெரியாதவர்போல் பேசுகிறீரே. குண்டோதரன் பசியடங்குவதென்றால் அது சாதாரணமான விஷயமா?

**நாரதர்:—** சரி. என்னதான் நடந்தது சொல்லு.

**குண்டோ:—** பசி, பசி, யென்று மடப்பள்ளிக்கு ஓடினேன். அங்கே லட்சக்கணக்கான பேர்களுக்குச் செய்து வைத்திருந்த சோறு, குழம்பு, கறிவகைகள், எல்லாவற்றையும் பாத்திரத்துடன் எடுத்து அப்படியே உள்ளே தள்ளினேன். பசியடங்கவில்லை. பிறகு உள்ளே புகுந்து பச்சையாயிருந்த காய் கறிகள் உப்பு மூட்டை, பருப்பு மூட்டை, அரிசி மூட்டை

எல்லாவற்றையும் அப்படியே உள்ளே தள்ளினேன். அப்பொழுதும் என் பசியடங்கவில்லை.

**நார-சந:—** ஹா! (வியப்புறுதல்)

**நாரதர்:—** பிறகு, பிறகு?

**குண்டோ:—** வெளியே வந்தேன். அங்கே உலாவிக்கொண்டிருந்த ஜனங்களை யெல்லாம் பிடித்து இழுக்கவாரம்பித்தேன்.

**நாரதர்:—** அப்புறம்?

**குண்டோ:—**உடனே எல்லோரும் பயந்து என்னப்பன் காலிலே போய் விழுந்தார்கள். உடனே என்னப்பன் எனக்கு ஒரு மலையைக் காண்பித்தார்.

**நாரதர்:—** அந்த மலையையும் உள்ளே தள்ளி யையா?

**குண்டோ:—** (நகைத்தவண்ணம்) அது என்ன மலை தெரியுமா? சோற்றுமலை. அத்தனையும் தின்ற பின் தான் என் பசி ஒருவாறு அடங்கிற்று.

**நாரதர்:—** (புன் சிரிப்புடன்) என்னப்பாயிது, நீ சொன்ன விபரத்தையும், உன் வயிற்றையும் பார்த்தால், விஷயம் நம்பக்கூடியதாயில்லையே.

**குண்டோ:—** எல்லாம் என்னப்பன் திருவிளையாடல்தான்.

**நாரதர்:—** ஆமாம், இவ்வளவு ஆகாரத்தையும் நீ தண்ணீர் குடிக்காமலேயா சாப்பிட்டாய்?

**குண்டோ:—** (சற்று யோசித்து) என்ன நாரதரே! நீரும் அப்பொழுது வந்திருந்த ஞாபகமிருக்கிறது, ஒன்றுமே தெரியாதவர் போலக் கேட்கின்றீரே. வைகையாற்றின் தண்ணீர் முழுதும் அடியேன் வயிற்றுக்குள்தானே போயிற்று. வை—கை. என்றார் என்னப்பன். வைத்தேன் கையை. அவ்வளவுதான். ஒரு பெரிய "ஆறு" உண்டாகிவிட்டது. என் தாகமும் தீர்ந்துவிட்டது.

**நாரதர்:—** (பயந்தவர்போல் நடித்து) முனிவர்களே! குண்டோதரன் சொல்வதையும், அவனுடைய செய்கையையும் பார்த்தால் பழைய ஞாபகத்துடன் தன்னை மறந்து நம்மெல்லோரையும் தூக்கி வாயில் போட்டுக்கொள்வான்போலிருக்கிறது. இவனை முன்னடி அனுப்புங்கள். நாம் பிறகு போவோம்.

**குண்டோ:—** என்ன நாரதரே! ...

**நார-சங்:—** போய் வா அப்பா.

(குண்டோ, சங்குகர், போதல்)

**நார:—** முனிபுங்கவர்களே! பார்த்தீர்களா. இப்படிப்பட்ட எண்ணிறைந்த புதுமைகள் நடைபெற்றிருப்பதினாலேதான் பரமேசன் வேதப்பொருளை மதுரையம்பதியில் காண்பிப்பதாகச் சொன்னார். வாருங்கள். செல்வோம்.

(எல்லோரும் செல்கின்றனர்)

(காட்சி முடிவு.)

## களம் 1. காட்சி 3.

**இடம்:— கைலாயத்தில் ஓர்புறம்.**

**பாத்:—** [சிவபிரான், பார்வதி, கணபதி, முருகன், நந்தி.]

**குறிப்பு:—** [எம்பிரான் ஓர் கல்லாசனத்தின் மீது வீற்றிருக்க, பார்வதிதேவி அருகில் நிற்றல்]

**பார்:—** நாதா! சனகாதி முனிவர்களுக்கு வேதத்தின் பொருளை மதுரையம்பதியில் நடத்திக் காண்பிப்பதாகச் சொன்னீர்களே, எனக்கும் அதன் பொருள் செம்மையாய் விளங்கவில்லை. ஆகையால் நாமிருவரும் தனிமையிலிருக்கும் இந்த சமயத்தில் தாங்கள் எனக்கு அப்பொருளை உபதேசிக்கவேண்டுகிறேன்.

**சிவ:—** தேவி! உனக்கு உபதேசிக்கவேண்டுமென்ற எண்ணம் எனக்கு ஏற்கனவேயுண்டு. ஆயினும், நீயே விரும்பிக் கேட்கும்பொழுது அதனை உபதேசித்தலே முறையென்றெண்ணி இவ்வளவு நாட் பொறுத்திருந்தேன். இதோ தெரிவிக்கின்றேன். நீ மனதை ஒரு நிலைப்படுத்திச் செவ்வென அறிந்துகொள். ......

**(குறிப்பு)** [சிவபெருமான் "**சிவபோதம்**" என்னும் சுவடிகளைத் தன் கையில் எடுத்துக் கொண்டு, உமாதேவிக்கு உபதேசம் செய்யவாரம்பிக்கிறார்.]

... "அகார, உகார, மகார," அக்ஷரங்கள் சேர்ந்து "ஓம்" என்று நாதப்ரம்மமாய் விளங்காநின்ற பிரணவத்திலிருந்து உண்டானது வேதம். நானும் அந்தப் பிரணவ ரூபமாய்த்தான் விளங்குகின்றேன். மாயையினால் அண்ட பிண்ட சராசரங்களனைத்தும் என்னிடத்துத் தோற்றமேயொழிய, தனியாக என்னையன்றி வேறு பொருள் கிடையாது. ...

(குறிப்பு) [இந்த சமயம் "முருகன்" வந்து தாயினருகே நிற்க, தேவி ஈசன் கூறுவதைக் கவனியாது, தன் சிந்தையை குழந்தையின் பால் செலுத்துகிறாள். ஈசன் மேலும் தொடர்ந்து]

... சகல ஜீவகோடிகளும் மாயைக்குள் சிக்கி கர்மானுசாரமாய்த் தோன்றித் தோன்றி மறைகின்றன. தேவி! .........

[உமாதேவி முருகனுடன் கொஞ்சுவதைக்கண்ட ஈசன் கோபத்துடன் எழுந்து]

...... தேவி! நீ என்னை உபதேசிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டாய், நான் அதன்படி மனதை ஒருநிலைப்படுத்திக் கவனிக்கச் சொன்னேன், அப்படியிருந்தும், அருமையான வேதப்பொருளை உபதேசிக்குங்கால் அதனை நீ பொருட்படுத்தாமல் உன் மனதைக் குழந்தையின்பாற் செலுத்துகின்றாய்......

(குறிப்பு) [இச்சமயம் "கணபதி" வந்து வியப்புடன் கவனிக்கிறார்]

......... நன்றாயிருக்கிறது. சகல பற்றையுந் துறந்து, என்னோடு ஒன்றி நிற்கவே வேதத்தின் பொருளை அறிய விரும்புவது. ஆகவே, ஐம்புலன்களையும் ஒடுக்கி பக்தியுடன் கேட்கவேண்டிய நீ, ஐம்பொறிகளின் வழியே மனதைத் தளரவிடும் சாதாரண மானிடரைப்போல் குழந்தையுடன் விளையாடி சந்தோஷத்தையடைய முயன்றாய். விருப்பு, வெறுப்புக்குள்ளடங்கிய உனக்கு இன்னும் அக்ஞானம் அகன்றபாடில்லை. அப்பேர்ப்பட்டவள் இக்கைலாயத்தில் இடம் பெறமுடியாது. பூலோகத்தில் பாபத் தொழில் செய்து அக்ஞானிகளாய் விளங்கும் வலைஞர்களிடையே வசித்து, உன் அக்ஞானவிருளைப்போக்கி, பின் இங்கு வரக்கடவாய்.

**கணபதி:—** பிதா! என்னயிது, ஓர் சிறு குற்றத்தின் பொருட்டு அன்னைக்கு மகத்தான சாபத்தைக் கொடுத்துவிட்டீர்களே. வேதத்தை உபதேசிக்கின்றவர்களுக்கு கோபமே வரக்கூடாதே. அதிலும் பரம்பொருளாகிய தங்களுக்குக் கோபம் வரலாமா? இவ்வளவிற்கும் காரணம் இந்த சிவபோதச்சுவடிகள் தானே.

[அருகிலிருந்த சுவடிகளை எடுத்து ஓர்புறம் எறிகிறார்.]

**சிவபெரு:—**(கடுஞ்சினத்துடன்) ஹே விநாயகா! என்ன காரியத்தைச் செய்துவிட்டாய்! ஆஹா, இதோ பார் இக்காரியத்தை நீ செய்தமைக்காக உனக்கும் மகத்தான சாபத்தைக் கொடுக்கிறேன்.

**கணபதி:—** (குறுங்கையுடன்) முடிந்தால் செய்யுங்கள்.

**சிவபெரு:—** ஓஹோ! நாமே பிரணவப்பொருளாயிருக்க, நம்மை சபிப்பது யாரென்ற அகங்காரமா?

**முருகன்:—** அடடா, இதென்னயிது வீண் கலகம். போதும். போதும். இந்த சிவபோதச் சுவடிகள் இருந்தால் இன்னும் இம்மாதிரியான தர்க்கங்கள் ஏற்பட்டுக்கொண்டேயிருக்கும். ...

(ஈசன் கையிலிருக்கும் சுவடியைப் பார்த்து)

... அண்ணு இதையேன் விட்டுவிட்டார்?

(பிடுங்கி ஓர்புறம் எறிகிருர்)

**சிவபெரு:—** (அளவற்ற கோபத்துடன்) ஹே முருகா! இவ்விருவர் செய்த காரியங்களை விட, நீ மகா கொடூரமான காரியத்தைச் செய்துவிட்டாய். இந்த சிவபோதத்தின் அருமையை நீ சற்றேனும் உணர்ந்தாயில்லை. சகலமுமறிந்த நீ ஒன்றுமறியாதவனைப்போல் இக்காரியத்தைச் செய்தபடியால், "ஊமை" யாகப்பூமண்டலத்தில் பிறக்கக் கடவாய்.

(இச்சமயம் "நந்தி" வருகிருர்)

**சிவ:—** யாரது?

**நந்தி:—** அடியேன்.

**சிவ:—** ஏனிங்கு வந்தாய்?

**நந்தி:—** (அச்சத்துடன்) ஏதோ சப்தம் கேட்டதே என்று......

சிவ:— ஆஹா! நான் தனிமையாயிருக்கும் சமயத்தில் இவ்விருவரையும் உள்ளே அநுமதித்தது மன்றி, நீயும் உனது கடமையை மறந்து இங்கு வந்திருக்கின்றாய். ஆகவே, கடமை தவறிய நீ "சுறாமீனாக" சமுத்திரத்தை யடையக்கடவாய்.

(குறிப்பு) [ஈசன் கோபத்துடன் ஆசனத்தில் வீற்றிருக்க தேவி அருகிற் சென்று அடி வணங்கி கண்களில் நீர் பொழிய].

பார்:— நாதா! இவ்வளவிற்கும் காரணமாகிய என்னை மன்னிக்கவேண்டும். நான் எங்கு பிறப்பது? மறுபடியும் எப்பொழுது தங்கள் வாம பாகத்தை யடைவது? என் மீது அன்பு கூர்ந்து தாங்களே வந்து என்னையாட்கொள்ள வேண்டுகிறேன்.

சிவ:— (கோபந்தணிந்து) உன் விருப்பம்போல் ஆகட்டும்.

முரு:— (வணங்கி) எந்தாய்! எனது பிழையைப் பொறுத்து எனக்கும் விமோசனமளிக்கவேண்டும்.

சிவ:— குமாரா! கவலை வேண்டாம். நீ மதுரையம்பதியில் வைசிய குலத்திற் பிறந்து சங்கப்புலவர்களால் நன்கு மதிக்கப்பெற்று, நம்மை வந்தடைவாய்.

நந்தி:— பரமேசா, ஹே பரம்பொருளே! அடியேனுக்கு ஒரு வழி சொல்லவேண்டாமா? எவ்வளவு காலம் நான் தேவரீரை விட்டிருப்பது?

சிவலீலா.

சிவ:— நந்தீ! உமாதேவியை நாம் ஆட்கொள்ளும் சமயம் உன்னையும் விடுவிப்போம். அதுவரையில் உங்கள் சாபத்தை யடையக்கடவீர்கள்.

(காட்சி முடிவு)

## "மாறித்தோன்றும் மௌனக்காட்சிகள்"

1. அலைகடல்:— [நந்தி சுறுமீனாக விழுதல்]
2. காடு:— [உமாதேவி குழந்தை வடிவாய் மாறி ஓர் மரத்தடியிற் தோன்ற, வேட்டைக்கு வந்த "வலையர்க்கரசன்" அக்குழந்தையை எடுத்துச் செல்லுதல்]
3. வீடு:— [ஓர் மஞ்சத்தில் தனபதி செட்டியாரின் மனைவி உறக்கத்திலாழ்ந்திருக்க, "முருகக் கடவுள்" தோன்றி அவள் கர்ப்பத்தில் மறைதல்]



# "விறகு விற்ற படலம்"

## களம் 2. காட்சி 1.

**இடம்:—** மதுரையம்பதிக்குச்செல்லும் வழி

**பாத்:—** [ஹேமனாதர், ஷையாரின் சிஷ்யர்கள்]

**(குறிப்பு)** [இரு சிஷ்யர்கள் "புலிக்கொடி" தாங்கி முன் செல்ல, மற்றிருவர் பின்னே விருதுகள் தாங்கிவர, நால்வர் பல்லக்கைச் சுமந்து வருகின்றார்கள். ஓர் மாணாக்கன் கட்டியங் கூறிக்கொண்டே செல்கிறான்]

**மாணா:—** பராக, பராக, சங்கீத சண்டமாருத, சங்கீத வித்வபூஷண, சங்கீத ரத்நாகர, சங்கீத வேத பண்டித, சங்கீத லயப்ரவாக, சங்கீத கலாக்ஞான, சங்கீத சங்கத்வனி, சங்கீத சுரசம்பன்ன, சங்கீதப் பொக்கிஷம், சங்கீத சாஹித்ய சக்கிரவர்த்தி கரவேக சுரவேக, ராஜராஜ பூஜித, பாலசரஸ்வதி "ஹேமனாதர்" வருகின்றார். சோழநாட்டு இன்னிசைப்புலவர் வருகின்றார். பராக், பராக்.

**(குறிப்பு)** [ஹேமனாதர் உள்ளிருந்தபடியே பல்லக்கை நிறுத்தும்படி சைகை செய்ய, பல்லக்கு நிறுத்தப்படுகிறது.]

**ஹேம:—** அடே மண்டூகம்! இந்தப் பாண்டி நாட்டின் எல்லையை அடைந்தவுடனேயே என்னையு

மறியாதபடி என் மனதில் அளவற்ற துக்கமுண்டாகிறதடா. என் தெரியுமா?

**மண்டு:**— ஆஹா, தங்கள் திருமுகத்தைப் பார்த்தவுடனேயே துக்கத்தின் காரணம் பளிச்சென்று தெரிகிறதே குருநாதா.

**ஹோம:**— (வியப்புற்று) அப்படியா! முகத்தைப் பார்த்தவுடனேயே மனோநிலையை அறிந்து சொல்லும்படியான அவ்வளவு திறமை வந்துவிட்டதா உனக்கு?

**மண்டு:**— எல்லாம் அவிடத்து கிருபைதான்.

**ஹோம:**— சொல் பார்க்கலாம்.

**மண்டு:**— இத்தனை நாட்களாய் சோழதேசத்துச் சாப்பாட்டிலேயே பழகிய நமது வயிற்றுக்கு, இந்தப் பாண்டிநாட்டு போஜனம் ஏதாவது கோளாறு செய்யுமோவென்ற துக்கந்தானே?

**ஹோம:**— (நகைத்தவண்ணம்) போடா முட்டாள். சாப்பாட்டிலேயே ஞாபகம் உனக்கு.

**நாணு:**— குருநாதா! அடியேன் கூறலாமோ?

**ஹோம:**— எங்கே உன் புத்தியைப் பார்க்கலாம். சொல்லு.

**நாணு:**— நமது சோழநாட்டைவிட இப்பாண்டிநாடு இவ்வளவு அழகாயிருக்கிறதே, நம்நாடு இப்படியில்லையே என்ற துக்கந்தானே?

**ஹேம:—** (நகைத்து) இரண்டு பயல்களும் பிர ஹஸ்பதிகள்தான். நான் துக்கப்படுவதின் காரணம் அதுவல்லடா. இவ்வளவு பெரிய நாட்டிலிருக்கும் சங்கீத வித்வான்கள் அனைவரும் நாளையதினம் இந்த "ஹேமனுதனால்" அவமானப்பட்டுத் தலைகுனியப் போகிறார்களே என்றுதான் துக்கமுண்டாகிறது.

**நாணு:—** அடாடாடா! என்ன தயாளகுணம்.

**மண்டு:—** குருநாதா! பாண்டியராஜன் சபையில் பெரிய பெரிய சங்கீதப்புலிகளெல்லாம் இருப்பதாகச் சொல்லிக்கொள்ளுகிறார்களே.

**ஹேம:—** (ஏளனத்துடன்) அதெல்லாம் வெறும் புரளிடா. அப்படியே இருந்தாலும் இந்த சோழ நாட்டு சிங்கத்துக்கெதிரில் பாண்டிநாட்டுப்புலிகள் என்னடா செய்யமுடியும்? இந்த மதுரை நகர் வாசிகள்தான் "சங்கீதம்" என்றால் பலம் என்ன விலை என்று கேட்கக்கூடியவர்களாயிற்றே, இவர்களாவது, பாடுவதாவது? நம்முடைய பாட்டுக்கும், பாணிக்கும் ஈடு சொல்ல யாரால் முடியும்?

**மண்டு:—** அதென்னவோ முடியாதுதான். நம் முடைய சோழநாட்டிற்பிறந்த "கழுதைகள்" கூட சுதியோடகத்துமே. அப்படியிருக்க, உங்களுக்குப் போட்டியாக யார் வரப்போகிறார்கள்?

**நாணு:—** (யோசனையுடன்) குருநாதா! எனக்கொரு சந்தேகம். இந்த நாட்டு ஜனங்களுக்குத்தான் சங்கீதத்தைப்பற்றி ஒன்றுமே தெரியாதே. தங்கள் பாட்டை ஆமோதிப்பது யார்?

**ஹேம:**— பாடத்தான் தெரியாதேயொழிய கேட்கும் ஞானம் கொஞ்சம் உண்டு. இல்லாவிட்டால் நானிங்கு வருவேனா? சரி, சரி, புறப்படுங்கள். நாழியாகிவிட்டது.

**நாணு:**— குருவே! அடியேனைப்பற்றி ஒரு விஷயம். கேட்கலாமோ?

**ஹேம:**— கேளேண்டா.

**நாணு:**— அடியேனுக்கு எல்லாம் வந்துவிட்டது. ஆனால், இந்த ராகம் மட்டும் சரியாக வர மாட்டேனென்கிறதே. என்ன செய்வது?

**ஹேம:**— பாடப்பாட ராகமென்று கேட்டதில்லையோ? எப்பொழுதும் பாடிக்கொண்டேயிருக்க வேண்டும். அப்படிச் செய்தால்தான் இராகம் பாட முடியும் ஊம். புறப்படுங்கள்.

**குறிப்பு:**— [மறுபடியும் முன்போல் பல்லக்கைத் தூக்கிச் செல்லுகின்றார்கள்.]

(காட்சி முடிவு.)

## களம் 2. காட்சி 2.

**இடம்:**— பாணர் இல்லம்

**பாத்:**— [பாணர், மங்கையர்க்கரசி]

**(குறிப்பு)** [பாணர் ஓர் சுவடியைக் கையில் வைத்துக்கொண்டு சிந்தனையிலாழ்ந்திருக்க, மங்கையர்க்கரசி விசிறியபடி அருகில் நிற்கிறாள்]

**பாணர்:—** (எழுந்து) ஹே! சோமசுந்தரப் பெருமானே! "நீரிற் குமிழி" போன்ற இவ்வுலக வாழ்க்கையில், மன ஆறுதலை யளிப்பது உன் நாம மந்திரமேயல்லது வேறுண்டோ?

**மங்கை:—** அரண்மனைக்குப் போகவேண்டிய சமயமாய்விட்டதுபோலிருக்கிறதே.

**பாணர்:—** பெண்ணே! நாளையதினமே "வரகுண பாண்டியன்" சபையில் பாடவேண்டி, ஓர் பாடல் எழுதிக்கொண்டிருந்தேன். அனுமதி பெற்று வந்திருக்கிறேனாதலால், இன்று அரண்மனைக்குப்போக வேண்டியதில்லை.

**மங்கை:—** இப்பாண்டியன் தன்னைப் புகழ்ந்து ஓர் பாடல் இயற்றும்படி கூறினாராமே, அதையா எழுதினீர்கள்?

**பாணர்:—** (செவிகளைப் பொத்திக்கொண்டு) சிவ, சிவ, பெண்ணே! அதுமட்டும் பாணனால் முடியாது. இந்த "நா" எம்பிரானைத் துதிக்குமேயலது நரனை ஒருபோதும் துதியாது.

**மங்கை:—** நாதா! இப்பாண்டியர் பரம்பரை சோமசுந்தரப்பெருமானின் அம்ஸமென்று கூறியிருக்கின்றீர்களே, அப்படியிருக்க, ஏன் அவர்களைத் துதிக்கக்கூடாது?

**பாணர்:—** உருவமிருக்கும்போது நிழலைத் துதிப்பானேன். நிலையான பொருளிருக்கும்பொழுது

நிலையற்ற பொருளைப் புகழுவதெல்லாம் அறிவீன மல்லவா. ...

(ஓர் ஏட்டைக் கையிலெடுத்து)

... எம்பிரான் மீது நான் இயற்றியுள்ள பாடலைக் கேள். ...

(குறிப்பு) ஓர் பாடலைப் பாடுகிறார். பாட்டு முடிந்ததும்) ... பூஜை நேரமாய்விட்டது. பெண்ணே! இதை வைத்திரு. ...

(ஏட்டை மனைவியிடம் கொடுத்துவிட்டு)

— நான் ஆலயத்திற்குச்சென்று வருகிறேன்.

(போகிறார்)

(காட்சி முடிவு.)

## களம் 2. காட்சி 3.

**இடம்:**— மதுரை நகர

**பாத்:** [கிட்டு, சுப்பு, நாணு,]

(குறிப்பு) [கிட்டு ஓர்புறமாக வர, சுப்பு ஓர் சிறுவனைக்கையில் பிடித்தவண்ணம் எதிர்ப் புறம் வருகிறான்]

**கிட்டு:**— வாடாப்பா சுப்பு, சௌக்யந்தானே?

**சுப்பு:**— (சலிப்புடன்) ஏதோ, இருக்கேன்.

**கிட்டு:**— ஆமா, நீ குருகுல வாசத்தை விட் டுட்டு இப்பொ சங்கீதம் சொல்லிக்கிறதாகன்னு கேள்விப்பட்டேன்.

சுப்பு:— ஆமா.

கிட்டு:— அதனாலேதான் உன்னை வெளியே பார்க்கமுடியலே. சங்கீத சமுத்திரத்திலே அப்படியே முழுகிட்டேபோலிருக்கு.

சுப்பு:— ஆமாண்டாப்பா. இந்த சமுத்திரத் திலேயிருந்து கரையேற வழி தெரியாமெத்தான் இப்பொ ரொம்ப அவஸ்தைப்பட்றேன்.

கிட்டு:— ஏண்டா, எதுவரைக்கும் வந்திருக்கு?

சுப்பு:— வந்திருக்கு ஒரு மாதிரியா. காலையிலே எழுந்திருக்கணும், என் குருவின் மாட்டுக்கு பருத்திக் கொட்டை அரைக்கணும், அப்புறம் இட்டலி முதலிய பட்சணங்கள் செய்யணும், அது முடிஞ்சதும் கடைக் குப்போய் காய்கறிகள் வாங்கிண்டுவரணும், அதுக்கு மேலே மத்யான சமயல் ஆரம்பம். இப்படியே வந் திண்டிருக்கு.

கிட்டு:— (நகைத்து) அடடே! என்னடாயிது, இப்பிடி நாள் முழுக்க வேலை செஞ்சிண்டிருந்தா நீ சங்கீதம் சொல்லிக்கிறதுதான் எப்பொ ?

சுப்பு:— நேரம் இருந்தாத்தானே.

கிட்டு:— ஏண்டா, உன் குரு சம்சாரம் அவ் வளவு நல்ல குணமில்லையோ ?

சுப்பு:— ஆஹா! த்சு, த்சு, த்சு, இன்னொரு தரம் சொல்லாதே. நாக்கு அழுகிடப்போறது. மகா உத்தமின்னு மகா மகா உத்தமி. "அப்பா

சாப்பிட்டாயா" என்றுகூட என்னைக் கேட்கிறதில்லே. அவ்வளவு பரம சாது.

**கிட்டு:**— அப்பொ, இன்னும் பாடமே ஆரம்பிக்கலியா?

**சுப்பு:**— ஓ, ஆரம்பிச்சு ஒரு வாரத்துக்கு மேலாறதேடா. போன வெள்ளிக்கிழமை "ஸா" ன்னு ஒரு சொரம் சொல்லிக்குடுத்தார். அடுத்த பாடம் "ரீ" ன்னு வருமாம். அது எப்பொ சொல்லிக்குடுக்கப்போறாரோ ஈசனுக்குத்தான் தெரியும். இபபொ, இந்த சங்கீத சமுத்திரத்திலேருந்து கரையேற கப்பல் படகு ஒன்னும் தேவையில்லே. ஒரு மரக்கட்டை கெடைச்சாப்போதும்போலிருக்கு.

**கிட்டு:**— ஏண்டா, அந்த குருவைத் தலே முழுகிட்டு வேறொரு குருவைப் புடிக்கிறதுதானேடா.

**சுப்பு:**— அட போடா பைத்தியக்காரா. இவர் நேக்கு ஏழாவது குருடா. ஆனா, முந்தின ஆறு குருவுக்கும் இவர் கொஞ்சம் தேவலே. இவர் பாட்டை நீ கேட்டதில்லேயோ? நேத்திக்கூட தெக்குமண்டபத்திலே கச்சேரி பண்ணாரேடா.

**கிட்டு:**— (விழுந்து விழுந்து சிரித்து) அடடே! அந்த அபஸ்வரக்குடுக்கையாடா உன் குரு? பேஷ். பேஷ். ஏண்டா! அவர் ஸ்வரம் பாடச்சே வாந்தியெடுக்கிற மாதிரின்னுயிருக்கு. நல்ல இன்பமான சாரீரண்டா. மழை காலத்திலே வறட்டுத்தவளே கத்தற மாதிரி. டே! நீ சீக்கிரம் முன்னுக்கு வந்துடுவே.

சுப்பு:— (கோபத்துடன்) போருண்டா நிறுத்து நீ பெரிய சங்கீதக்குடுக்கைதான். ஏண்டா! சங்கீதத்திலே நோக்கு அ. ஆ. தெரியுமாடா ?

கிட்டு:— பின்னே என்னடா, தாளஞானமும், ஸ்வரஞானமும் இல்லாத பாட்டு ஒரு பாட்டாடா ? பொண்டுகள் கல்யாண ஊஞ்சலுக்குப் பாட்ற மாதிரி. இந்த லக்ஷணத்திலே அவர் வாயிலேருந்து வறது என்ன பாஷைங்கறதே புரியமாட்டேங்கறதே. தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம், எல்லாம் கதம்பமான்னு பாட்றார். அவர் பாட்டைக்கேட்டு ஒருநாள் வண்ணான் கூட ஆத்துக்கு வந்துட்டானுமே.

சுப்பு: — ஏண்டா, சங்கீதம் கேக்கப்போறவன் பேசாமெ அதைக் கேட்டிண்டுவறதை விட்டுட்டு பாஷையைப்பத்தி ஏன் ஆராய்ச்சிபண்றே ?

கிட்டு:— ரொம்ப புத்திசாலிடா நீ. ஏண்டா! என்ன பாட்றாரின்னு தெரியாமெ எப்பிடிடா ரஸிக்கறது? அவர் பாட்ற பாஷை அவருக்கே தெரியாது போலிருக்கு. அர்த்தம் தெரிஞ்சு பாடினாத்தானேடா "பாவம்" ஏற்படும். அருமையான "தமிழ்" உன் குரு வாயிலே ஆப்டுண்டு முழிக்கறதுடா.

சுப்பு:— டே கிட்டு ! நான் சங்கீதம் கத்துக்கிறதுக்காகவா அங்கே இருக்கேன்னு நெனைச்சுண்டிருக்கே. விஷயம் வேறெயிருக்கு.

கிட்டு:— என்னடா ? என்னண்டை சொல்லப்படாதா.

**சுப்பு:**— எங்குருவுக்கு அழகான பொண்ணொத்தியிருக்கா. அவளைக் கல்யாணம் பண்ணிக்கறதுக்காகத்தான் அப்படியே சுத்திண்டிருக்கேன்.

**கிட்டு:**— அப்படியா சங்கதி?

(பக்கத்தில் நிற்கும் பையனைப் பார்த்து)

... இந்தப் பையன் யாரு?

**சுப்பு:**— எங்குருவுடைய புத்ரன். நல்ல ஞானம். இன்னும் பாடம் கூட ஆரம்பிக்கலே. பூர்வக்ஞானம் அப்படியே இருக்கு. சுரம் கூட பாடுவான். ஆனா, காது மட்டும் செவிடு.

**கிட்டு:**— எங்கே பாடச்சொல்லு.

[சுப்பு சுரம் பாடும்படி பையனிடம் சைகை செய்ய, பையன் " **ஸ ரி க ம ப த நிஸ** " என்ற ஸ்வரங்களை ஸ்தான பேதமின்றி கத்துகிருன்.]

**கிட்டு:**— (நகைத்து) அடாடா. பேதமில்லாத போக்குடா. தோப்பனுருடைய ஞானம் அப்படியே இருக்கு.

**பையன்:**— (அசட்டுச்சிரிப்புடன்) இன்னிக்கி எண்ணை ஸ்நாநம் பண்ணிண்டேன். அதனுலே சாரீரம்............

**கிட்டு:**— (இடை மறித்து) ஆஹா, இப்பவே சிம்ம கர்ஜனையாயிருக்கே. அப்புறம் கேக்கணுமா? ...

(குறிப்பு) [நாணு முணகிக்கொண்டே விரைந்து வர, சுப்பு அவனைப்பிடித்து நிறுத்தி, சந்தோஷத்துடன்]

**சுப்பு:**— டே நாணு! ~~தஞ்சாவூர்லேயிருந்து~~ எப்படா வந்தே? பாத்து ரொம்ப நாளாச்சு. உன் குரு வந்திருக்காரா?

**நாணு:**— (பாட்டாக) விடப்பா கையை வேகமாகப்போறேன்.

[கிட்டு, சுப்பு இருவரும் அதிசயிக்கிறார்கள்]

**சுப்பு:**— என்னடா யிது?

**நாணு:**— (பாட்டாக) வீண்பொழுது போக்க விருப்பமில்லை எனக்கு.

**சுப்பு:**— (நகைப்புடன்) சர்தான். சர்வம் பாட்டு மயந்தானோ? எப்பொடா வந்தே? விஷயத்தைச் சொல்லு அப்புறம் பாடலாம்.

**நாணு:**— (பாட்டாக) பாடப்பாட ராகமென்று எந்தன் குருநாதர் சொன்னார் நேற்று ...

**சுப்பு:**— விஷயத்தைச் சொன்னாத்தான் விடுவேன் ...

**நாணு:**— (பாட்டாக) ஐயோ இந்த உபத்ரவத்தைத்தாங்கவே என்னால் முடியவேயில்லையே ஈசா ...

**கிட்டு:**— அடடே! ரஸபாவத்துக்குத் தகுந்த மாதிரி ராகம் மார்றதே!

**சுப்:—** இதுதான் அழுகிற ராகமோ. பேஷ், ரொம்ப நன்னருக்கு. டே நாணு! விஷயத்தைச் சொல்லியாவது அழுடா.

**நாணு:—** (விருத்தம்போல் பாடுகிறான்)

... பாண்டியராஜன் சபையில் என் குருநாதர், இன்றைய தினம் கச்சேரி செய்யப்போகிறார் — இதற்காகத்தான் நானும் போகிறேன். — சமயம் தெரியாமல் சகுனத்தடை செய்கிறாயே. ...

**கிட்டு:—** அடடா. அபாரம், அபாரம்.

**சுப்:—** (கெஞ்சலாக) டே நாணு! உன் குருவண்டை சொல்லி என்னையும் சேத்துக்கப்படாதா — கொஞ்சம் தயவு பண்ணேன்.

**நாணு:—** (தாளம் போட்ட வண்ணம்) கரிஸநித ரிஸநிதப ஸநிதபம மு-டிந்-த-மட்-டும்-பார்க்-கி-றேன்.

**கிட்டு:—** ஓஹோ! பல்லவி சாதகமோ?

(மண்டூகம் விரைந்து வந்து நாணுவை நோக்கி)

**மண்டூ:-** ஏண்டா! எங்கேடா போய் தொலைஞ்சே? குரு அங்கே ஏகமா கோவிச்சுக்கிறார். — வாடா.

(நாணுவை இழுத்துச் செல்கிறான்)

**சுப்பு:—** (வருத்தத்துடன்) அடாடா. இவ்வளவு சுரங்களிருக்கே நான் "சா" மாத்திரம் தானே கத்திண்டிருக்கேன். டே கிட்டு! நான் கொலுமண்டபத்துக்குப் போறேன், நீ வறயோ?

கிட்டு:— நேக்கு வேலேயிருக்கு.

சுப்பு:— அப்பொ, நான் வறேன்.

(இருவரும் போகிறார்கள்.)

(காட்சி முடிவு.)

## களம் 2. காட்சி 4.

இடம்:— கொலுமண்டபம்

பாத்:— [வரகுணன், ஹேமநாதன், புலவர்கள், அமைச்சர்கள், காவலர்கள், பாணர், முதலியோர்]

(குறிப்பு) [வரகுணபாண்டியன் புலவர்கள், அமைச்சர்கள், புடைசூழ, மயிலாசனத்தில் வீற்றிருக்கின்றான். "நடனமாதர்" நடனம் புரிந்து செல்கின்றனர் ... ஓர் காவலன் வந்து வணங்கி]

காவ:— இறைவா! அடியேன் காத்துக்கொண்டிருக்கின்றேன்.

வர-பாண்:— யாது காரணம்?

காவ:— ~~சோழ~~ வடநாடெங்கணும் புகழ்பெற்றுள்ள "ஹேமநாதர்" என்னும் இன்னிசைப்புலவர் சமூகத்தில் தனது திறமையை வெளிப்படுத்தி பாண்டிநாட்டின் புகழையடைய விரும்பி வாயிலில் காத்துக்கொண்டிருக்கின்றார். உத்திரவு.

பாண்:— மிகவும் களிப்புற்றேன். வரட்டும்.

(குறிப்பு) [காவலன் வணங்கிச்செல்ல, ஹேம நாதர் தன் சிஷ்யர்களுடன் வந்து ஓர் மலர்மாலையை அரசன் கழுத்தில் சூட்டி, கையில் எலுமிச்சம்பழம் கொடுத்து வணங்குகிறார். காவலன் ஓர் ஆசனம் கொணர்ந்து போடுகிறான்.]

**பாண்:—** அமருங்கள்.

**ஹேம:—** (அமர்ந்து) அரசர் பெருமானே! நான் தங்களைப்போன்ற பல அரசர்களின் முன்னிலையில் எனது திறமையைக் காண்பித்து, அவர்களை ஆநந்தக் கடலிலாழ்த்தி, அளவற்ற புகழையும், ஏராளமான பரிசுகளையும் அடைந்திருக்கின்றேனாயினும், இம் மதுரையம்பதியை அரசு புரிந்துவரும் சோமசுந்தரக் கடவுளின் பிரதிநிதியாகிய தங்கள் முன்னிலையில் எனது அபாரமான திறமையைக்காட்டிப் பரிசில் பெற்றாலொழிய பயனில்லையென்று, உலகெங்கும் பிர காசிக்கும் சூரியனைப்போல் விளங்குகின்ற தங்களை நாடி வந்தேன். சமூகத்தின் சமயத்தையும், உத்திர வையும், எதிர்பார்க்கின்றேன்.

**பாண்:—** பண்டிதரே! உம்மைப்போன்ற இன் னிசைப்புலவர்களிடமிருந்து பாடல் கேட்க எனக் கெப்பொழுதும் ஆவலுண்டு. "உலகனைத்தும் இசை யின்பத்தில் அடக்கமன்றோ?" மாய உலகைக்கிழித்து, எல்லையற்ற பரம்பொருளைக்காண நமக்கு வழிகாட்டும் கருவியாயிருப்பது இசையன்றோ? தாம் இங்கு வந் ததுபற்றி நான் அளவற்ற மகிழ்ச்சி யடைகிறேன். தம் போன்ற புலவர்மணிகளின் வருகை இச்சபைக்கே ஓர் தனிச்சிறப்பைக் கொடுக்கின்றது.

**ஹேம:**— ஆம். உண்மையே. எவ்விதமான படிப்பும், திறமையுமிருந்தாலும், பக்ஷிகளுக்கெல்லாம் படர்ந்த விருட்சம் ஆதரவளிப்பதுபோல், எம்போன்ற புலவர்களுக்கெல்லாம் தங்களைப்போன்ற அரசர்களின் ஆதரவுதானே ஆக்கமளிக்கின்றது. எங்கள் திறமையை உலகறியச்செய்வது தாங்களேயன்றோ ?

**பாண்:**— நல்லது. தங்களுடைய இன்னிசையின்பத்தைப்பருக சபையினர் காத்துக்கொண்டிருக்கின்றனர். அவர்களை மகிழ்விக்கத் தற்போது ீமா ?

**ஹேம:**— ஆஹா, காத்துக்கொண்டிருக்கின்றேன். இசையமுதம் கேட்பவர்க்குமட்டுமன்றி, பாடுபவர்க்கும் இன்பந்தருவதாயிற்றே.

(சுருதி கூட்டி சித்தமானபின்)

— ஆரம்பிக்கலாமா ?

**பாண்:** — (தலையசைக்கிறான்)

**(குறிப்பு)** [ஹேமநாதன் "சங்கீத இன்பமே பெரிய இன்பம்" என்னும் கருத்தமைந்த ஓர் பாடலைப்பாடுகிறான். சபையோர் புலவரை மிகவும் பாராட்டுகின்றனர். பாட்டு முடிந்ததும்]

**பாண்:**— ஆஹா ! என்ன இனிமை ! என்ன இனிமை !! ஹேமநாதரே ! நீரே இசையரசர். உமது தமிழிசை செவிகட்குமட்டுமன்றி மனத்திற்கும் இன்பத்தைத்தந்தது. உமக்கிணை நீரே.

(குறிப்பு) [அரசன் ஓர் அமைச்சருக்கு சைகை காட்ட, அவர் உட்செல்கிறார்.]

... புலவர்களே ! நம் மருந்தமிழ்மொழியைப் போல் இசைக்கேற்ற மொழி வேறெம்மொழி யேனு முளதோ ?

**ஒரு புலவர்:—** வேந்தே ! இஃதொன்றே இசை யோடிசைந்தமொழி.

**மற்றொருவர்:—** அரசே ! தமிழிசையொன்றே பொருளும் இனிமையும் நிறைந்தது.

**மூன்றாமவர்:—** ஆம். அதுபற்றியே இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ், என நம்மருந்தமிழ் மொழியை மூன்று பிரிவாக வகுத்துள்ளனர்.

**ஹேமநாதன்:—** வேந்தே! யாமறிந்த மொழி களிலே "இசைக்கினிது" தமிழ்மொழிபோல் எங்குங் காணேம்.

(குறிப்பு) (உட்சென்ற அமைச்சர் ஓர் தட்டில் பொன்முடிப்பும், உயர்ந்த ஆடைகளும் கொணர்ந்து ஹேமநாதருக்கு வழங்குகிறார். ஹேமநாதன் அதை வணக்கத்துடன் பெற்றுக் கொண்டு]

**ஹேம:—** மன்னர்பிரானே ! பாத்திரமறிந்து பிச்சையிடும் தம்போன்ற அரசர்கள் இப்பூமண்டலத் தில் மிகக்குறைவு. எனது நற்காலமே இங்கு வருமாறு ஊக்கியதெனவெண்ணுகின்றேன். இவ்வித்தையில்

எனக்கிணை ஒருவருமில்லையெனத் தாங்கள் கூறியதை நான் அளவற்ற மகிழ்ச்சியுடன் அங்கீகரித்துக்கொள்கிறேன். உண்மையை உரைத்தீர்கள். இவ்வெண்ணம் தங்கள் மனதிற்றோன்றியதற்குக் காரணம் தங்களுடைய இன்னிசைப் புலமையேயாகும். உண்மையில் எனக்கிணை ஒருவருமில்லையென்பதைத் தாங்கள் மட்டுமே உணர்ந்திருக்கின்றீர்கள். இச்சபையினர் அனைவரும் அதனை யறிந்துகொள்ளும்படியான ஓர் சந்தர்ப்பத்தை எனக்களித்தீர்களானால், என் மனம் மகிழ்ச்சியடையும்.

(சபையோர் ஒருவரையொருவர் பார்க்கிறார்கள்)

**பாண்:—** எனது எண்ணமே சபையினருக்கும் ஏற்பட்டிருக்குமென யான் எண்ணுகின்றேன். ஆயினும் தங்கள் விருப்பத்தை அறிவிக்கலாம்

**ஹேமநாதர்:—** (கர்வத்துடன்) தங்களுடைய ஆஸ்தான வித்வான்களில் எவரேனுமொருவரை என்னோடு போட்டியாகப் பாடச்சொன்னாலும் சரி, அல்லது அத்தனை பேரையுமே பாடச்சொன்னாலும் சரி. அவர்களனைவரையும் வென்று எனது பெருமையை சபையறியச்செய்கிறேன். போட்டியிட்டு வென்றால் தான் உலகம் ஒப்புக்கொள்ளும்.

(சபையோர் வியப்புடன் அரசனைப் பார்க்கிறார்கள்)

**பாண்:—** (குறுநகை தோன்ற) நல்லது. அங்ஙனமே செய்வோம். இப்போட்டியை நாளையதினம் வைத்துக்கொள்ளலாமா ?

**ஹேமு:—** இப்பொழுதே வைத்துக்கொண்டா லும் சரி.

**பாண்:—** இன்று சபை கலையும் நாழிகையாய் விட்டதால், நாளை வைத்துக்கொள்வோம். அமைச்சரே! இவருக்கு வேண்டிய ஏற்பாடுகள் குறைவின்றி நடக்கட்டும்.

**ஹேமு:—** அரசர் பெருமானே! நான் போய் வருகிறேன்.

(ஹேமநாதன் தனது சிஷ்யர்களுடன் போதல்.)

**பாண்:—** சபை கலையலாம்.

**(குறிப்பு)** [சபை கலைகிறது. அரசன் இருக்கையி னின்றெழுந்து, புலவர்களுடன் தனிமையில் பேசுதல்.]

... புலவர்களே! இப்பொழுது பாடிச்சென்ற இன்னிசைப்புலவரைப்பற்றி உங்கள் கருத்தென்ன?

**ஒருவர்:—** வேந்தே! இசைக்கலையில் நன்கு பயிற்சியுடையவராகக் காணப்படுகின்றார்.

**பாண்:—** யான் கேட்பது அதுவன்று. இவருடைய மொழிகளைக் கேட்ட மாத்திரத்தில் உங்கள் மனத்தில் என்ன எண்ணம் உதிக்கின்றது?

**மற்றொருவர்:—** மிகவும் "அகந்தை" கொண்டவராய்த் தோற்றுகிறது.

**அமைச்சர்:—** அரசே! இவருடைய இன்னி சைப்புலமை சிறந்ததே. ஆனால், வித்தைக்குக் கர்வம் கூடாது. அஃது புலமையைத் தின்றுவிடும்.

**பாண்:—** ஆம். எனக்கும் அவ்வாறே தோன்றியது. இவருடைய புலமையால் ஏற்பட்ட மகிழ்ச்சியை இவரது அகந்தையும், கர்வமும் மாற்றிவிட்டது.

**புலவர்:—** ஆம். அரசே! இவர் இவ்வாறு புகன்றது புலவர்கள் நிறைந்த பாண்டிநாட்டின் சபையை அவமதித்ததாகும்.

**பாண:—** நமமுடைய இனை

யாரேனுமொருவர் நாளை இவருடன் போட்டியிட்டு வெல்லுவராயின் என் மனம் களிப்படையும். இதற்கு யார் முன் வருகின்றீர்கள்?

**புலவர்:—** அரசே! நமது பாணபத்ரரை இப்பொழுதே வரவழைத்து இச்செய்தியை அவரிடமறிவித்தால், ஒருக்கால் வெற்றி யடையக்கூடுமெனவெண்

(ஏனையோரும் தலை யசைக்கிறார்கள்.)

**பாண்:—** உண்மையே. ஆனால், பாணர் இன்று சபைக்குக்கூட வரவில்லைபோலிருக்கிறதே.

**அமைச்சர்:—** அரசே! பாணர் உலகோடு ஒட்டி வாழ்ந்தாலும், தாமரையிலை நீர்போல் பற்றற்று நிற்பவர். நம்மிடமிருக்கும் இன்னிசைப்புலவர்களில் பாணர் சிறந்தவரேயெனினும், சதா பக்தித்துறையி

வீடுபட்டு தனது இசைத்திறனை விருத்தி செய்து கொள்ளாமல் விட்டுவிட்டார். ...... இருந்தாலும் அவரையே நியமிப்போம்.

புலவர்:— இதோ பாணரே வந்துவிட்டார்.

(பாணர் வந்து வணங்கி நிற்கிறார்)

பாண்:— வரவேண்டும். பாணரே!

பாணர்:— அரசரேறே! எல்லோரும் ஏதோ சிந்தனையிலாழ்ந்திருப்பதுபோற் தோன்றுகிறதே ...

பாண்:— வேறொன்றுமில்லை. இன்று வடநாட்டிலிருந்து ஓர் இன்னிசைப்புலவர் நமது சபைக்கு வந்திருந்தார். அவர் மிகவும் நன்றாகப் பாடுகிறார். ஆயினும் சிறிது கர்வமுடையோராய்க் காணப்படுகின்றார். ஆகையால், தாங்கள் அவரோடு போட்டியிட்டு நாளை வெற்றிபெறவேண்டும். பாண்டிநாட்டின் பெருமை உம்மால் காப்பாற்றப்படவேண்டும்.

பாணர்:—அரசே! தங்கள் அன்பையும், சோமசுந்தரக்கடவுளின் அருளையும் முன்னிட்டு, யான் இப்போட்டியில் வெற்றியடைய முயற்சி செய்து பார்க்கிறேன்.

எல்லோரும்:— பாணரே! கட்டாயம் வெற்றி உமதே

பாணர்:— (தலை வணங்குகிறார்).

பாண்:— பாணரே! தமிழ்நாட்டின் புகழ் உமது கையிலிருக்கிறது. ஞாபகமிருக்கட்டும்.

[அரசன் முதலியோர் செல்ல, பாணர் தனித்து நின்று யோசிக்கிறார்.]

**பாணர்:—** (தனி மொழி) ஹே கூடலம்பதி வாசா! இதுவும் நின் சோதனையா? உனது அருளை வேண்டி நிற்கும் எளியேனை இவ்வாறு போட்டியி லீடுபடச்செய்தல் முறையோ?

(செல்கிறார்.)

(காட்சி முடிவு.)

## களம் 2. காட்சி 5.

**இடம்:—** பாணர் இல்லம்

**பாத்:—** [பாணர், மங்கையர்க்கரசி]

**(குறிப்பு)** [பாணர் யோசனையுடன் உலாவிக் கொண்டிருக்கிறார். மங்கையர்க்கரசி அவ ரருகிற் சென்று மிக்கப் பணிவுடன்]

**மங்கை:—** நாதா! என்றுமில்லாது தங்கள் முகத்தில் இன்று கவலைக்குறி தோன்றுகிறதே. காரணத்தை அடியாளுக்குத் தெரிவிக்கலாமோ?

**பாணர்:—** ஒன்றுமில்லை.

**மங்கை:—** வாயினால் ஒன்றுமில்லையென்றாலும், தங்கள் முகம் உள்ளத்தின் உணர்ச்சியைத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறதே. எப்பொழுதும் பரமேஸ்வரனின் தியானத்தில் மூழ்கியிருக்கும் தங்கள் மனத்தைத் துன்புறுத்தும் "புண்" ஏதுவென்று நானறியக்கூடாதா?

**பாணர்:—** பெண்ணே! இவ்வளவு காலமாகக் குன்றின்மேலிட்ட விளக்கைப்போல் சுடரொளி வீசி வரும் என்னருந்தமிழ் பாண்டிநாட்டின் பெருமை என்னால் அழிவுறப்போகும் காலம் நேர்ந்துவிட்டதே. நான் என்ன செய்வேன்?

**மங்கை:—** என்ன! (வியப்புற்று) முத்தமிழ் களஞ்சியமாய் விளங்கும் பாண்டிநாட்டின் பெருமைக்கு அழிவா!... தங்களாலா? நாதா! விபரமறிய என்னுள்ளம் துடிக்கின்றது.

**பாணர்:—** பெண்ணே! நமதரச சபையில் இன்று "ஹேமனாதர்" என்னும் புகழ்பெற்ற சோழ நாட்டு இன்னிசைப்புலவர் ஒருவர் வந்திருந்தாராம். அவர் சபையில் தனது திறமையைக் காட்டினாராம். அரசரும் ஏனையோரும் மிகவும் பாராட்டினார்களாம். அந்த இசைப்புலவரோடு நான் நாளை "சங்கீதப் போட்டி" நடத்தவேண்டுமென்று அரசர் கட்டளை பிறப்பித்துள்ளார்.

**மங்கை:—** அரசர் இவ்வாறு "இசைப்போட்டி" நடத்த விரும்பியதற்கு காரணம் ஏதேனுமிருக்க வேண்டுமே.

**பாணர்:—** ஆம். அந்தப்புலவர் கொஞ்சம் இறுமாப்புடையவர்போலிருக்கிறது. ஆஸ்தான வித்வான்களில் யார் வந்தாலும் வெற்றிகொள்வதாக சபையில் கூறினாராம்.

**மங்கை:—** அப்படியானால் தாங்கள் போட்டி யிடுவது தவறல்லவே. அவர் அவ்வாறு கூறியது நமது பாண்டிநாட்டிற்கு இழுக்கன்றோ? குற்றம் அவருடையதாயிருக்கத் தாங்களேன் வருந்தவேண்டும்?

**பாணர்:—** அவரைப்பற்றி நான் கேள்விப்பட்டதிலிருந்து, அவர் மிகப்பெரிய வித்வானென்று தெரிகிறது. அவரை வெல்லுவது எளிதன்று. நான் தோல்வி யடைவதுபற்றிக்கூட எனக்குக் கவலையில்லை. நாட்டின் புகழ் குன்றுமே யென்றுதான் அளவற்ற வருத்தமடைகிறேன். சீ, மானமிழந்து உயிர் வாழுவதா? ... இந்நிலையில் நாட்டின் பெருமையைக் காப்பாற்றத்திறனற்ற இந்த உடல் இருந்தென்ன பயன்?

**மங்கை:—** (பணிவுடன்) நாதா! கவலைக்குத் தங்கள் உள்ளத்தில் இடமளிக்கலாமா? இதுவரையில் தாங்கள் செய்துவந்த காரியங்களெல்லாம் தங்களால் தான் முடிந்ததென்று எண்ணிக்கொண்டிருக்கிறீர்களா? சகலமுமறிந்த தங்களுக்கு அடியாள் என்ன சொல்லப்போகிறேன். மாயத்திரையை விலக்கிக் கண் திறந்து பாருங்கள். அல்லும் பகலும், நமக்குத் தோன்றாத் துணைவனாயிருந்துவரும் சோமசுந்தரக் கடவுளின் சுமையல்லவாயிது? அவன் பார்த்துக் கொள்வான். தாங்களேன் துயருறவேண்டும்? ஐயன் அடியார்க்கடியனன்றோ?

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில."

... என்பதை மறந்தீர்களா?

**பாணர்:—** (*தழுவிக்கொண்டு*) பெண்மணி! நீயே எனக்கு ஞானசிரியன். வழிகாட்டி. இவ் வுண்மையை இதுகாறுமுணராது மாய்கையிலீடுபட் டிருந்தேனே. உன்னை வாழ்க்கைத் துணைவியாக அடையப்பெற்றது எம்பிரான் திருவருளேயாம். ... நான் ஆலயத்திற்குச்சென்று வருகின்றேன்.

(*பாணர் செல்கிறார்*)

(*காட்சி முடிவு.*)

## களம் 2. காட்சி 6.

**இடம்:—** சோமசுந்தரர் ஆலயம்

**பாத்:—** பாணர் (*தனிமை*)

**(குறிப்பு)** [*பாணர் சந்நிதிக்கெதிரே நின்று இறை வனை வணங்குகிறார்.*]

**பாணர்:—** (*தனி*) ஹே துவாதசாந்தப்பெரு மானே! கூடலம்பதிவாசா! தமது பெருமையை அறிந் தும் அறியாதவனைப்போல் அஞ்ஞானவிருளில் மூழ்கி, "நான், எனது," என்ற அகம்பாவத்தைக்கொண்டு தம்மை மறந்த குற்றத்தை பொறுத்தருளவேண்டும். மாமனாக வந்து ஓர் சிறுவனுக்காக நீ வழக்காடினயே, நாவினாலும் சொல்லத்தகாத மாபாதகத்தைச் செய்த வனுக்கு அருள்புரிந்தாயே, சிராப்பள்ளி க்ஷேத்திரத் தில் தாயாகத்தோன்றி மருத்துவம் பார்த்தனையே, இன்னும் அடியார்களைக் காப்பாற்றுவதன் பொருட்டு

# சிவலீலா.

எண்ணிறந்த மனித உருவங்களில் தோன்றியிருக்கின்றாயே, இவற்றையெல்லாம் மறந்து கண்ணில்லாக் குருடனானேனே, மன்னிக்கவேண்டும். பரம்பொருளே! என்னைக் காப்பாற்றவேண்டும். அருட்கண் திறந்து பார்க்கவேண்டும். ...

[எழுசீர்க்கழில் நெடிலடி ஆசிரிய விருத்தம்.]

ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோகொடிய
ஆலமமு தாகவிலை யோ
அக்கடலின் மீதுவட வனனிற்க வில்லையோ
அந்தரத் தகிலகோ டி
தாழாமல் நிலைநிற்க வில்லையோ மேருவும்
தனுவாக வளையவிலை யோ
சப்தமே கங்களும் வச்ரதர னாணையிற்
சஞ்சரித் திடவில்லை யோ
வாழாது வாழவே (இ)ராமனடி யாற்சிலையு
மடமங்கை யாகவிலை யோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகளுலக
மார்க்கத்தில் வைக்கவிலை யோ
பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்
பண்ணுவது னக்கருமை யோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்த மே ...

(தாயுமானர் பாடல்)

(குறிப்பு) [பாணர் கீழ் விழுந்து வணங்குகிறார். உள்ளிருந்து பேரொலி கேட்கின்றது.]

**பேரொலி:**— ஹே பாணபத்ரா ! கவலை வேண்டாம். நாம் உன்பால்வைத்துள்ள "அன்பு" மாறாது.

(குறிப்பு) [ "ஒலி" நின்றதும் கோவில் மணிகள் ஒலிக்கின்றன. பேரிடி முழக்கத்துடன் "**இலிங்கம்**" வெடிக்க, உள்ளிருந்து தலையில் விறகுக்கட்டு, தோளில் கோடாரி, கையில் தம்புரா, முதலியவற்றுடன் "**விறகு வெட்டி**" உருவத்தில் சிவபெருமான் வெளிப்படுகிறார்.]

(காட்சி முடிவு.)

## களம் 2. காட்சி 7.

**இடம்:**— மதுரை நகர வீதி

**பாத்:**— [விறகு வெட்டி, நகரவாசிகள், நாலு.]

(குறிப்பு) [விறகு தலையன் ஆடிப்பாடியவண்ணம் விலை கூறி வர, நகர மாந்தர் பலரும் அவனுடைய கூத்தினைக்கண்டு நகைக்கின்றனர்]

**விறகு:**— ஐயா ! - விறகு, விறகு, விறகு வாங்கலையோ விறகு, விறகு ...

**ஒரு ஆள்:**— என்னடாப்பா விலை ?

**விறகு:**— இதுங்களாசாமி, ஒரு வராகனுங்க.

**ஆள்:**— (திகைப்புற்று) அட பாவி ! என்னடாயிது, ஒரு வராகனா !

**விறகு:**— ஆமாஞ் சாமி.

**ஆள்:**— கொஞ்சம் நிதானமாச் சொல்லுடா.

**விறகு:—** அதாஞ் சாமி வெலே. இட்டமுண்டானு வாங்குங்க, நட்டமுண்டானு போங்க.

**ஆள்:—** அட பைத்தியக்காரா! இந்த விறகு விற்கத்தானு?

(போகிருன். எதிரே வந்த மற்ெருருநகர் வாசி)

**நகர் வாசி:—** என்னேயா வெலே சொன்னுன் அந்தக் கட்டுவிறகு?

**முதல் மனிதன்:—** அவன் கிடக்கிருன். கிறுக்கன்போலிருககையா.

**இரண்டா மனிதன்:—** என்?

**முதல் மனிதன்:—** பின்னே என்னேயா, ஒரு பணங்குடுக்கிற கட்டுக்கு ஒரு வராகனும்.

**விறகு:—** இன்னுங் கொஞ்சநாழி போனு, ஒரு பாட்டும் பாடணும் சாமி.

(மறுபடியும் பாடிக்கொண்டே செல்கிருன்.)

**மூன்ரு-மனி:—** என்னடா வெலே?

**விறகு:—** இந்தக்கட்டுக்கா சாமி, நீங்க நல்ல மனுசராத் தெரியுது. போவுது ... ரெண்டு வராகனும் ஒரு படி அரிசியும் குடுங்க.

**மூன்-மனி:—** ஏண்டா! (நகைத்து) இந்தக் கட்டுக்கு மாத்திரமா, — ஒன்னேயும் சேத்தாடா?

**விறகு:—** ஊம். என்னே வெலேக்கு வாங்க ஒங்க பாட்டன் வந்தாலும் முடியாது சாமி. வேண்டான்னு போறியா, என்னமோ ...

**மூன்-மணி:—** (கோபத்துடன்) ஏண்டா, என்னடா மரியாதையில்லாதெ பேசறே ...

**விறகு:—** (அலட்சியமாய்) சர்தாம் போய்யா.

**மூன்-மணி:—** (தனி) ஏது ஆசாமி மொரடன் போலயிருக்கு.

(போகிறான்.)

**ஓர் கிழவி:—** எப்பா! ரெண்டு வராகன் சொல்றியே ......

**விறகு:—** ரெண்டு வராகனு! யார் சொன்னு? சரியாப்போச்சி, மூணு வராகன் குடுங்க தாயி.

**கிழவி:—** (சிரித்து) எப்பா! இதென்ன தங்கக்கட்டா?

**விறகு:—** தங்கக்கட்டுக்கு மேலே வைரக்கட்டம்மா. இதிலே ஒரு வெறகெடுத்து அடுப்பிலே வச்சா, ஒரு கும்பாபிஷேகத்துக்கே சமயல் ஆயிடும். இன்னொரு வெறகெடுத்துவச்சா, உங்க வூட்டுக்கல்யாணத்தையே முடிச்சுடலாம். ஏம்மா மூணு வராகன் குடுக்கப்படாது?

**கிழவி:—** போப்பா, போ, உன் ஆயுஸுக்குள்ள வெறகு வித்துப்புடும் ... (தனி) கட்டையிலே போக, என்ன வெலெ சொல்றான்!

**விறகு:—** நீ எங்கம்மா போவே?

(கிழவி போகிறாள்.)

[விறகுவெட்டி மறுபடியும் பாடிக்கொண்டு செல்கிறான்.]

**நான்கா-மணி:—** (விறகைத் தொட்டுப் பார்த்து) வெலே யென்னப்பா? புச்சையாயிருக்கும் போலிருக்கே. எரியுமா?

**விறகு:—** சாமி! நீங்க வாங்குற ஆளு தானுங்களா?

**நான்-மணி:—** எப்பா, எப்பிடித் தெரியுது?

**விறகு:—** போறபோக்கிலே கேட்டுட்டு போறாப்பிலேயிருக்கு.

**நான்-மணி:—** வெலேயைச்சொல்லு ... எரியுமா?

**விறகு:—** வருசம் பூரா எரிக்கலாஞ் சாமி. நாலு வராகன் குடுங்க.

**நா-மணி:—** (வியப்புடன்) எப்பிடீ! நாலு பணமா, நாலு வராகனுடா?

**விறகு:—** பதறாதேங்க. நிதானமாக கேளுங்க சாமி. நாலு வராகன்தான் ஏண்ணு, இந்தக்கட்டுலே ஒரு வெறகெடுத்து அடுப்பிலே வச்சா சந்தன வாசனே, இன்னொண்ணே எடுத்துவச்சா, சாம்பிராணி வாசனே. ஒண்ணு சவ்வாது வாசனே, இப்படியே ஒவ்வொரு வெறகுக்கும் தினுசு வாரியா வாசனே உண்டு சாமி. விறகை வச்சிப்பாத்துப் பணங்குடுங்க.

**நா-மணி:—** ஏண்டா, புத்தி நிதானமாத்தான் பேசுறியா, இல்லே ஒம்மேலே ஆளு ஏறிக்கிட்டிருக்காளு?

**விறகு:—** (நகைத்து) ஆளும் ஏறலே, தேளும் ஏறலே சாமி, எல்லார் மேலேயும் நாந்தான் இருககேன். அல்லாரும் என்னே பித்தன் பித்தன்னு சொல்ருங்க. ஆனு, நான் ஒழுங்கு தவறமாட்டேஞ் சாமி ...

**நா-மனி:—** இந்த வெறகை வாங்கறதைவிட சருகு போட்டு எரிக்கலாம்.

**விறகு:—** சரி. இந்த ஊருலே என் வெறகை வாங்க யாரும் குடுத்து வைக்கலே போலிருக்கு.

(மீண்டும் பாடுகிருன்.)

**நா-மனி:—** டே. டே. ரொம்பநல்லா பாட்டையேடாப்பா. ஒரு நல்ல தம்பூரை எடுத்துக்கிட்டுக் கௌம்பினு, உன் வயிறு நெறைஞ்சுபோகுமே. ஏன் இந்த வெறகுக்கட்டைத் தூக்கிக்கிட்டுத் திரியுறே ?

**விறகு:—** அந்த யோசனேயெல்லாம் உங்கிட்ட கேக்கவரும்போது சொல்லலாம் போய்யா ...

[நான்காவது மனிதன் போக, நானு வந்து விறகைப் பார்த்து]

**நானு:—** (பாட்டாக) இந்த விறகென்ன விலே, எந்தனுக்குத்தான் வேண்டும் சீக்கிரம் சொல்லப்பா.

[விறகு வெட்டி நகைத்தவண்ணம் அவனுக்கு பாட்டாகவே பதிலுரைக்கின்ருன் ]

**நானு:—** (பாட்டாக) தாளத்தை விட்டுப்பாடி சங்கீதத்தை ஏனப்பா கொலே செய்கிருய் ? ...

(விறகு வெட்டி மறுபடியும் நகைக்க.)

**நாணு:** — (தனி) (பாட்டாக) முறை தெரியாமல் பாடும் இவனிடத்தில் விறகு வாங்குதல் பாவம். (செல்கிறான்.)

[விறகுவெட்டி மறுபடியும் பாடிக்கொண்டே செல்கிறான்.]

(காட்சி முடிவு.)

## களம் 2. காட்சி 8.

**இடம்:**— ஹேமநாதன் இருப்பிடம்

**பாத்:**— [ஹேமநாதன், சிஷ்யர்கள், விறகு வெட்டி.]

(குறிப்பு) [ஹேமநாதன் வெளித்திண்ணையி லமர்ந்து வெற்றிலை போட்டுக்கொண்டிருக்க, மண்டுகம் எதிரே நிற்கிறான்.]

**ஹேம:**— ஏண்டா மண்டுகம், அவன் எங்கேடா நாணு? ...

(நாணு ஓடிவந்து நிற்றல்.)

(நாணுவை நோக்கி) ஏண்டா, மதுரை வந்த வுடன் உங்களுக்கெல்லாம் தலைகால் புரியவில்லையா?

**நாணு:**— (பாட்டாக) கோபமேனோ எந்தன் குருவே அடியேன் மீது ...

**ஹேம:** —(இடைமறித்து) டே, டே, போருண்டா உன் சங்கீதம். எங்கே போயிருந்தாய்?

**நாணு:**—(சற்று நின்று) குருநாதா, அருள் நீதா ... (பாட ஆரம்பிக்கிறான்.)

**ஹேமு:**—(இடைமறித்து) ஏண்டா, பாடப்பாட ராகம் வருமென்று சொன்னேனே, அதுதான் இப்படி யாரம்பித்துவிட்டாயோ? விஷயத்தைப் பேசும் போது பாடாதேடா.

**நாணு:**— உத்திரவு.

**ஹேமு:**— இவ்வளவு நாழி எங்கே போயிருந் தாய்?

**நாணு:**— கடைவீதிக்குப் போயிருந்தேன், அடாடா! ஊர் முழுதும் தங்களுடையபேச்சுத்தான். சந்து பொந்துகளிலெல்லாம் தங்கள் பெயர்தான் அடிபடுகிறது.

**ஹேமு:**— ஓஹோ! அதிக க்யாதி தானோ?

**மண்டூகம்:**— சந்தேகமென்ன குரோ! நேற்று தாங்கள் செய்த கானம் என்னை அப்படியே ஆநந்த நித்திரையிலாழ்த்திவிட்டதே.

(**ஹேமு:**— (புன்னகையுடன்) ஏண்டா நாணு, இந்த மண்டூகத்துக்கும் கொஞ்சம் சங்கீத ஞானம் உண்டாகிறதுபோலிருக்கிறதே.

**நாணு:**— குருநாதா, தங்கள் காலில் ஒட்டிய தூசுக்கும் (பாட்டாக) சங்கீத சாஸ்த்ர ...

**ஹேமு:**— (அதட்டி) டே ... என்னடாயிது விட மாட்டாய்போலிருக்கிறதே.

**நாணு:**—இல்லை. அப்படியே ஞாபகமறதியாய்...

**ஹேமம:**— டே மண்டூகம்! என்னுடைய முழுத் திறமையையும், பிரயோகிக்க இன்னும் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. நாளையதினம் பார் ...

**நாணு:**— குருநாதா! அடியேன் தங்கள் திறமையை யறியாதவனா? இப்பொழுது என் புத்திக் கெட்டியவரையில் நாளை அரசர் தங்களுடைய சங்கீத இன்பத்தில் மூழ்கி, தன்னையும் மறந்து இந்த ராஜ்யத்தையே கொடுத்தாலும் கொடுத்துவிடுவார்போல்

**ஹேமம:**— (தற்பெருமையுடன்) டே நாணு, அதெல்லாம் ~~சோழநாட்டு~~ மண்ணின் விசேஷமடா... யாரடா அது,? ...

(மற்றொரு சிஷ்யன் வர)

... தூங்குமூஞ்சியா,? எங்கேடா தூங்கினாய் இவ்வளவு நேரம்?

**தூங்கு:**— (கண்ணை மூடியபடி) ‘இல்லை சாமி, அரண்மனைச்சாப்பாடு ரொம்ப பலம். அதுதான் என்னைக் கீழே தள்ளிவிட்டது.

**ஹேமம:**— சரி, சரி, தூங்குங்கள். நாளை கச்சேரியிருப்பதால் வெகுநாழி கண் விழிக்கக்கூடாது.

(குறிப்பு) [எழுந்து உட்செல்ல, சிஷ்யர்கள் பின் செல்கிறார்கள். வீட்டின் கதவு சாத்தப்படுகிறது. “விறகு வெட்டி” பாடிக்கொண்டே வந்து தலைச்சுமையை இறக்கித் திண்ணை மீது வைத்துவிட்டு,]

**விறகு:**—(*தனி*) அப்பாடா. பொழுதும்போச்சு. இண்ணைக்கி யாருமொகத்திலே முழிச்சனோ தெரியலே. கொண்டாந்த கட்டு அப்படியே யிருக்கு. சரி, வெள்ளௗனப்பாத்துக்கலாம். இந்த யெடம் கூட்டி மொழுவி, சுத்தமா வச்சிருக்கு. தூங்கறதுக்கு சரியான எடம். ராத்திரி பொழுதைக் கழிச்சுப்புட்டு காத்தாலே போவோம். ...

(*திண்ணையில் உட்கார்ந்து*)

... இந்த ஊட்லே எந்த எசமான் இருக்காரோ ?
தெரியலே — ஊம். யாரு இருந்தா நமக்கென்ன ?

[*தலைமுண்டாசைத் திண்ணையில் விரித்துப் படுத்து, சற்று பொறுத்து எழுந்து*]

... என்ன எழவு, கொசுவோ, மூட்டையோ கடிக்குதே. ஏது, தூக்கம் வராதுபோலிருக்கே. — அட கடவுளே ! இண்ணிக்கிப்பொழுது இப்பிடியா போகணும். ... விறகும் விக்கலே, வயத்துக்குச் சோறுமில்லே, போரும் போதாததுக்கு தூக்கமும் இல்லாதெ போச்சி,

(*உட்புறம் பார்த்துச் சிரித்தபடி*)

... தூக்கம் வர்றதுவரை ஒரு பாட்டாவது பாடலாம்.

(குறிப்பு) [*ஓர் பாட்டைப் பாடுகிறான். பாட்டு முடிந்ததும், ஹேமநாதன் அலங்கோலமாய் ஓடிவந்து*]

**ஹேம:**— *யாரப்பா இங்கே உட்கார்ந்திருப்பது?*

விறகு:—(எழுந்து) ஏஞ்சாமி நாந்தான்.

ஹேமா:— (சுற்று முற்றும் பார்த்து) இப்பொழுது இங்கு பாடினவர் யார்?

விறகு:— ஏஞ்சாமி கேக்கிறிங்க?

ஹேமா:— யார் பாடியது சொல்லேன். ஒருவரையுங் காணோமே.

விறகு:— யாரு சாமி பாடினு? ஏஞ்சாமி, ஓங்க தூக்கத்தைக் கெடுத்துட்டாப்பிலேயிருக்கு.

ஹேமா:— அடடா, அதற்காகக் கேட்கவில்லை, பாடியது யார்? அவரெங்கே போனார் சொல்லேன்.

விறகு:(- அசட்டுச்சிரிப்புடன்) நான்தான் சாமி.

ஹேமா:— (வியப்புற்று) நீயா! ஏண்டா, உண்மையாக நீதானு பாடினுய்?

விறகு:— ஆமாஞ்சாமி. நாந்தான் சும்மா கத்திக்கிட்டிருந்தேன்.

ஹேமா:—கத்தினுயா! ஆஹா! நீ பாடின பாட்டு என் பிராணனை வெளியில் இழுக்கிறதேடா. நீ யாரடாப்பா? யாரிடத்தில் பாட்டுச்சொல்லிக்கொண்டாய்? ... அப்பா! எனக்காக சிரமத்தைப்பாராது அந்தப்பாட்டை இன்னொருமுறை பாடு கேட்போம்.

விறகு:— என்னுசாமி கேலி பண்றிங்க. குந்திக்கிட்டிருக்கச்சொன்னு இருக்கேன். 'போகச்சொன்னு போயிட்றேன். என்னைப் பாடச்சொல்றிங்களே ...

**ஹேமை:—** போகாதே அப்பா இரு, இரு. நீ பாடவேண்டாம். இதை யாரிடத்தில் கற்றுக்கொண்டாய் ? அதையாவது சொல்லப்படாதா ?

**விறகு:—** சாமி, நான் தெரியாத பாடினு, கத்துக் குடுத்த புண்ணியவான் என்ன பண்ணுவாருங்க? — இந்த ஊருலே பாணபத்திருண்ணு அரமனையிலே பாடற ஐயா இருக்காருங்க, அவருகிட்ட கேட்டிருக்கேஞ் சாமி.

**ஹேமை:—** (ஆச்சர்யத்தோடு) பாணரிடத்திலேயா ! கேட்டிருக்கையா ! எப்பொழுது ?

**விறகு:—**கொஞ்சநாளு பாணபத்ர ஐயா ஊட்லே வேலே செஞ்சிக்கிட்டிருந்தேனுங்க, அப்பொ சிச்சை சொல்லிக்கிட்டேன். ஐயா ரொம்ப நல்லவரு. அவுரு நல்லாத்தான் சொல்லிக்குடுத்தாரு. நான் சுத்த முட்டாப்பயலுங்க. என்னு சொல்லிக்குடுத்தும் எனக்கு பாட்டுவல்லே. வயசும் ஆச்சு, ஐயா போடா முட்டாப்பயலே, ஒனக்கு ஒண்ணும் வராதுண்ணு தொரத்திட்டாருங்க.

**ஹேமை:—** (அசைவற்று சிந்தனையுடன் விறகு தலையனைப் பார்க்கிறான்)

**விறகு:—**என்னு சாமி இப்பிடிப் பாக்கிறிங்களே!

**ஹேமை:—** (தனக்குள்)

... ஆஹா ! பாணரிடத்தில் சங்கீதம் சொல்லிக் கொண்டு உபயோகமில்லாமல் போனவன், இப்படிப்

பாடுகிறான், இந்தப்போடு போடுகிறான். உபயோக மில்லாதவனே இப்படிப் பாடினல்? அடேயப்பா! பாணர் அபாரமான பேர்வழிபோலிருக்கிறது. ஏதேது, நாளை இங்கிருந்தால் நமது மானம் போய் விடும். இராவோடிரவாக மூட்டை கட்டவேண்டியது தான்.

(உட்புறம் சென்று கூச்சலிட்டு)

...டே நாணு! மண்டேகம், எழுப்பு எல்லோரையும். சீக்கிரம் — ஒரு விநாடி கூடத் தாமதிக்கக் கூடாது. ... பொழுது விடியுமுன் "சோழவந்தான்" போய்ச்சேரவேண்டும். புறப்படுங்கள் சீக்கிரம். போன சாமான் போகட்டும்.

[சிஷ்யர்கள் உள்ளிருந்து வந்து தூக்கக்கலக் கத்தில் தாறுமாருய் அங்குமிங்கும் ஓடு கிருர்கள்.]

**நாணு:—** (பாட்டாக) என்ன ஆபத்து இப் போது வந்துவிட்டதோ ...

**ஹேமு:—** (கோபத்துடன்) சீ, இந்த சமயத்தில் உன் சங்கீதம் வேறு. ...

(சிஷ்யர்கள் சாமான்களை மூட்டை கட்டுகிருர்கள்)

**விறகு:—** (நகைத்து) சாமி, சாமி, ஏஞ்சாமி இப்பிடி ஓட்றீங்க? என்ன வந்துடுச்சிங்க?

**ஹேமு:—** அப்பா! அந்த மட்டும் விஷயத்தைச் சொன்னயே.

மண்டு:—குருவே பல்லக்கு ?

ஹேமம:— ஒன்றும் வேண்டாம். புறப்படுங்கள்.

[எல்லோருமாக விழுந்தடித்து ஓடுகிறார்கள். விறகு தலையன் விழுந்து விழுந்து சிரித்தபடி]

விறகு:—சரியாப்போச்சு. எம்பாட்டைக்கேட்டா இந்த ஓட்டம் ? எம்பாட்டுக்கே ஊரை விட்டு ஓடிறா, நம்ப பாணபத்ர ஐயா பாட்டைக்கேட்டுட்டா ஒலகத்தைவிட்டே போயிடுவிங்கபோலிருக்கே. இதுக்குத் தானா இந்த ஆடம்பரம் ? கொடிவேறே, பாவட்டம் வேறே, பல்லக்கு வேறே, ஆளுங்க வேறே, ... ...

[நகைத்தபடியே "விறகு தலையன்" உருமாறி சிவபெருமான் தோற்றமளிக்கிறார்.]

(காட்சி முடிவு.)

## களம் 2. காட்சி 9.

இடம்:— அரசன் தனியறை

பாத்:— [பாண்டியன், அமைச்சர், புலவர்கள், காவலன்]

(குறிப்பு) [பாண்டியன் புலவர்களுடனும், அமைச்சருடனும் பேசிக்கொண்டிருக்கிறான்.]

பாண்:— அமைச்சரே ! ஹேமனாதன் இரவோடிரவாக ஓடிப்போகவேண்டிய காரணமென்ன? வியப்பாகவன்றோயிருக்கின்றது. இஃதுண்மைதானா ? நீர் விசாரித்தீரா ?

**அமை:**— அரசே! நான் நேரிற் சென்று விசாரிக்கவில்லை. நமது அரண்மனையில் பேச்சு வந்தது. விசாரித்து வரும்படி ஒற்றனை யனுப்பினேன். இன்னும் திரும்பவில்லை.

(பாணர் வருகிறார்.)

... இதோ பாணர் வருகிறார்.

**பாண்டி:**— வாரும் பாணரே, எது இவ்வளவு காலையில் வந்தது?

**பாணர்:**— வேந்தே, என்ன ஆச்சர்யம்! நமது குலதெய்வமாகிய சொக்கநாதப்பெருமானுடைய திருவருளை என்னென்று கூறுவது?

**பாண்:**—பாணரே, நீர் புகல்வது இன்னதென்று விளங்கவில்லையே.

**பாண்:**— அரசே! சோமசுந்தரக்கடவுள் விறகு தலையனாகப்போய் பாடி ஹேமனாதரை விரட்டியதாக நேற்றிரவு எனக்கு சொப்பனம் அருளினார். ஆஹா! எனதையன் கருணையை என்னென்பேன்!

(காவலன் ஓடிவந்து வணங்கி)

**காவ:**— இறைவா, ஹேமனாதரையும் சிஷ்யர்களையும் மாளிகையில் காணோம், எல்லாப்பொருட்களும் அலங்கோலமாய்க் கிடக்கின்றது. பக்கத்தில் விசாரித்ததில் யாரோ ஓர் விறகு தலையன் நேற்றிரவு பாடிக் கொண்டிருந்ததாகவும், அதன் பின் அவர்கள் போய் விட்டதாகவும் தெரிகிறது.

**பாண்:—** *(பாணரை வணங்கி)*

... பாணரே, மகா பக்தரையா நீர். உமது பெருமையே பெருமை. எல்லாம் வல்ல இறைவன் உமக்காக அடிமை வேடந்தாங்கினரென்றால், மற்றெல்லோரும் உமக்கடிமையே யென்பதில் ஐயமுண்டோ? இன்றுமுதல் உமது விருப்பம்போல் இறைவணக்கத்தி லீடுபட்டிருக்கலாம். உமக்குத்தோன்றும் சமயம் அரண்மனைக்கு எழுந்தருளி எங்களெல்லோரையும், மகிழ்விக்கவேண்டும். இந்தப் பாண்டிநாட்டின் செல்வங்கள் அனைத்தும் இனி உம்முடையதே.

**பாணர்:—** *(ஆநந்தக் கண்ணீர்விட்டு)*

... அரசே, இஃது எனது பெருமையன்று. நமது தமிழ்ப் பாண்டிநாட்டின் பெருமையே.

(காட்சி முடிவு.)

## களம் 2. காட்சி 10.

**இடம்:—** *நகர வீதி*

**பாத்:—** [சம்பு சாஸ்திரி, சுப்புக்குட்டி பட்டர், தீட்சதர்.]

(குறிப்பு) [பட்டர் ஆலயத்திற்குச்சென்றுகொண்டிருக்கும் வழியில் சாஸ்திரி எதிர்ப்பட்டு]

**சாஸ்:—** ஓய் சுப்புக்குட்டி பட்டரே, நீர் ரெண்டு கைக்கும் தோடா போட்டிண்டு, மார்பிலே வெளங்கிற கௌரீசங்கத்தைக் குனிஞ்சு குனிஞ்சு பாத்து, ஓம்பது

அடுக்கு தீபத்தைத் தூக்கித்தூக்கி, ஆராதனை பண்ணாது தாங்கணும் மிச்சம். சோமசுந்தரேஸ்வரரும் கோவிலும் எங்களுக்குத்தான் சொந்தம்னு பெருமையடிச்சுக்கிறேள். ஆனா, கடைசிலே நடந்ததைப் பாத்தீரா ?

**பட்டர்:**— (கோபத்துடன்) ஓய், என்னங்கணும் அடுக்கிறீர் ? சொன்னாலும் சொல்லாதபோனாலும் சுந்தரேஸ்வரரா எங்களுக்குத்தாய்யா சொந்தம்.

**சம்பு:**— (கேலியாக) ஆஹா, கேக்கணுமா. அதான் பகவான் ஒங்களையெல்லாம் விட்டுட்டு பாணரைத் தேடிப்போனார்.

**பட்டர்:**— ஓஹோ அப்படி வாரும் வழிக்கி. ஊர்லே ஏதோ ஒரு பொரளி கௌப்பியிருக்காளே, அதை என்னண்டை சொல்லவர்றீமா ? போங்காணும் எவனாவது ஏமாந்த சோணகிரியிருந்தா அவனண்டை போய்ச் சொல்லும்.

[இருவருக்கும் வாக்குவாதம் பலக்க, தீட்சதர் வருகிறார்.]

**தீட்ச:**— ஓய், ஓய், என்ன சண்டை ? வாக்குவாதம் பலமாயிருக்கே. ஏன் இப்பிடி அடிச்சுக்கறயள்?

**பட்டர்:**— (அசட்டுச்சிரிப்புடன்) ஒன்னுமில்லேன்னா. — ஊர்லே எவனோ ஒத்தன் புரளி கௌப்பி விட்டிருக்கானோ யில்லியோ, — அதை ஆதாரமா வச்சிண்டு சுந்தரேஸ்வர ஸ்வரூபமாயிருக்கிற பட்டர்மாரையெல்லாம் தூஷிக்கிறார்னா. ...

**தீட்ச:—** புரளியாவது, எதுங்காணும் புரளி?

**பட்டர்:—** அதான்னு — சுந்தரேஸ்வரர் விறகு தலையனாக ரூபமெடுத்து ஹேமனாதர் தங்கியிருந்த வீட்டுக்குப் போனாராம், அங்கே ஒக்காண்டு பாடினாராம், அவாளை ஊரை விட்டே தொரத்திட்டாராம், எல்லாம் நம்ம பாணருடைய மகிமையாம். எப்பிடியிருக்கு சேதி? ... சொல்றவன் சொன்னு கேக்கறவனுக்கு மதியெங்கே போச்சுன்னேன்?

**தீட்ச:—** என்னங்கணும், மகாராஜா வரைக்கும் சேதியெட்டியிருக்கு, இது புளுகாயிருக்க முடியுமோ? ... அப்படின்னு ஹேமனாதர் எங்கேதான் போனார்? மாயமா மறைஞ்சுட்டாரோ!

**சாஸ்:—** அப்படிக் கேளுங்கோன்னேன். சொல்லுங்கணும் பதில் சொல்லும்.

**பட்டர்;—** (தீட்சதரிடம்) சர்தான், ஒங்களுக்கு விஷயம் தெரியாதுபோலிருக்கு. ... எல்லாம் இந்த பாணருடைய தந்திரம்னு ... போட்டியிலே தான் ஜெயிக்கப்போறதில்லேன்னு பாணருக்கு நன்னாத்தெரியும், தோத்துட்டாலோ பொழைப்புக்கு ஆபத்து, மானம் போயிடும், அதனாலே ராத்திரியோட ராத்திரியா ஆசாமியை சரிப்படுத்தி ...

**சாஸ்:—** (இடைமறித்து) ஓய், ஓய், "நா" அழுகிடப்போறதுங்காணும். அவர் மிதிச்ச மண்ணை மிதிச்சவாளுக்குக்கூட அந்த மாதிரி எண்ணம் உதிக்காதே, வெறுமனே பொறாமையினாலே தாறுமாறு ஒளறுதேயும்.

பட்டர்:— (கோபத்துடன்) அப்பிடின்னு, பகவான் கோவில் கதவைத் தெறந்திண்டு நேரே ஹேமனாதர் தங்கியிருந்த வீட்டுக்கே போயிட்டாரோன்னேன் ?

தீட்ச:— சந்தேகம் வேறெயா நமக்கு ? இந்த ஹாலாஸ்ய க்ஷேத்திரத்திலே பகவான் அடியார்களைக் காப்பாற்றச்செய்திருக்கிற எண்ணிறந்த லீலைகள்லே இது ஒன்னு. இதிலே அதிசயமென்னயிருக்கு ?

சாஸ்:— சே, சே, நீங்க சொல்றது தப்பு. இவர் வந்து கோவில் கதவை நன்னு இழுத்துப்பூட்டி, சாவியை இடுப்பிலே சொருகிண்டிருக்கச்சே, பகவான் எப்பிடி வெளிலே போயிருக்கமுடியும் ? அதின்னு அவருடைய கேள்வி ...(பட்டரை நோக்கி) எங்கணும், அதானேங்கணும் ?

பட்டர்:— (கோபத்துடன்) ஓய், நேரடியாப் பேசறதாயிருந்தா என்னண்டை பேசும். இந்த கிண்டல் கிண்டல்லாம் வச்சுக்காதேயும்—தெரியுமோ. ...

சாஸ்:— என்னத்தைங்கணும் நேரடியாப்பேசறது ? உள்ளன்போட பரமேஸ்வரனைத் தியானிக்கிறவாளுக்கு பகவான் அனுக்ரஹம் பண்றதிலே அதிசயமென்னயிருக்கு; நீர் நம்பினாலும் சரி நம்பாவிட்டாலும் சரி, போம், நீர் பிரதிதினமும் அபிஷேக அர்ச்சனாதி கைங்கர்யங்கள்ளாம் பண்ணீட்டாப்பிலே பகவான் ஒமக்கு அருள் புரிஞ்சுடுவாராக்கும் ? பக்தி மனஸிலேன்னு இருக்கணும். — "எட்டுத்திசையும் பதினாறு

கோணமும் ஏத்தியொன்றாய் முட்டித்ததும்பி மூளைத் தெழும் ஜோதியை மூடரெல்லாம், கட்டிச்சுருட்டிக் கக்கத்தில் வைப்பார், கருத்தில் வையார்" அப்பிடீன்னு பெரியவா சொல்லியிருக்காளே, நீர் புடிச்சிருக்கீமா ?

**பட்டர்:—** சரி, சரி, ஓங்களண்டை பேசிண்டிருந்தா என் வைதீக கார்யங்கள் கெட்டுடும். — நாழியாச்சு நான் வறேன். ...

(விரைந்து போகிறார்.)

**தீட்ச:—** (நகைத்து) ஊம், பைத்தியக்கார மனுஷன். — இந்த மதுரை க்ஷேத்திரத்திலே ஈஸ்வரன் இன்னும் என்னென்ன லீலா விநோதங்களை யெல்லாம் பண்ணப்போறாரோ, யார் கண்டா ? — அப்பொ, நான் வரட்டுமா சாஸ்திரியளே. ...

**சாஸ்:—** சரி ... (இருவரும் போகிறார்கள்.)

(காட்சி முடிவு.)



# "தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்"



## களம் 3. காட்சி 1.

இடம்:— அரண்மனைப்பூங்கா.

பாத்:— [செண்பகபாண்டியன், பூங்குழலி]

(குறிப்பு) [அரசி "பூங்குழலி" பளிங்காசனத்தில் வீற்றிருக்க, மயில் நடனம் நடைபெறுகின்றது. — நடனத்தினிடையே மன்னன் வந்து அரசியின் பின் நிற்கிறான். — நடனம் முடிந்ததும் அரசி ஏதோ சிந்தனையிலாழ்ந்திருக்கிறாள்.]

**அரசன்:**— காதலீ ! ஆழ்ந்த நினைவுபோலிருக்கின்றதே.

**அரசி:**— (திடுக்கிட்டெழுந்து) எப்பொழுது வந்தீர்கள் நாதா !

**அரசன்:**— (புன்னகையுடன்) சற்று முன் வந்தேன். உன் மனம் இங்கில்லை யென்பதை யறிந்து பின்புறமாய் நின்றுகொண்டிருந்தேன்.

**அரசி:**— நாதா ! இயற்கையின் எழிலை எண்ணி எண்ணி இன்புற்றிருந்தேன். இந்த இளவேனிற்காலத்தில் அழகே உருவாய் அமைந்துள்ள இப்பூம்பொழிலில், நிறைந்த இந்நிலவொளியில், நம்மோடிருந்து களிப்பதற்கு காதலரில்லையே என்று வருந்திக்கொண்டிருந்தேன். உடனே தங்களுடைய குரல் கேட்டது. ஆஹா, இப்பொழுதே என்னுள்ளம் களிப்புற்றது.

**அரசன்:**— (தழுவிக்கொண்டு) அன்பே! இயற்கையிலேயே என்றும் அழகுத்திரளாய் விளங்கும் இப்பொழில், இந்த இளவேனிற்காலத்தில் சிறப்புற்றுத் தோன்றுவது வியப்பல்லவே. இக்காலத்திற்றனே தருக்களெல்லாம் சருகுதிர்த்து புதிதாய் தளிர்விட்டு ஒளி பரப்பி நிற்கும். நறுமணப்பூக்களெல்லாம் மலருவதும், அம்மலர்களிலுள்ள பூந்தேனை யருந்த வண்டினங்கள்வந்து மொய்த்துக்கொண்டு ரீங்காரம் பாடித் திரிவதும், களிவெறியாடுவதும் இக்காலத்தில் தானே. எல்லா பறவை யினங்களும் தந்தம் பேடுகளுடன் ஆடிப்பாடித்திரியும் இந்தக்காலம் நம்போன்ற காதலர்கள் உள்ளத்தில் களிப்பையூட்டியது வியப்பல்லவே.

**அரசி:**— ஆம் நாதா, உண்மையே. ஆயினும் காலைக்கதிரோனுகிய தங்களுடைய ஒளியினுல் இன்று இப்பூம்பொழில் மிகவும் சிறப்புற்று விளங்குகிறதெனவெண்ணுகிறேன்.

**அரசன்:**— (குறுநகையுடன்) காதலீ! மதிமுகத்தினளாகிய நீ எழுந்தருளியதே அதற்குக் காரணம்.

(குறிப்பு) [இருவரும் உலவிக்கொண்டிருக்க, அரசன் எங்கிருந்தோ ஓர் நறுமணம் வீசுவதை நுகர்ந்தவண்ணம் தனக்குள்]

**அரசன்:**— (தனிமொழி) இந்த நறுமணம் எங்கிருந்து வருகின்றது? (ஓரிடத்தில் சற்று நின்று) வியப்பாகவன்றோயிருக்கின்றது! நான் எத்தனையோ விதமான மலர்களின் நறுமணத்தையெல்லாம் நுகர்ந்

திருக்கிறேன், ஆயினும், அவைகளெல்லாவற்றையும் விட மேன்மையுடையதும், இதுகாறும் யான் நுகர்ந் திராததுமான ஓரினியமணம் இன்று காற்றுடன்கலந்து வீசுகின்றதே:— ஆஹா ! ....

(குறிப்பு) [ சுற்று முற்று முள்ள மலர்களின் மணத்தை நுகர்ந்தவாறு அரசியினருகிற் செல்ல, தான் நுகரும் மணம் அவள் கூந்தலி னின்றும் வீசுவதையறிகிறான்]

(தனக்குள்) ஆகா! அறிந்தேன், அறிந்தேன். இந்நறுமணம் இவளது கூந்தலி லிருந்தன்றோ வரு கின்றது,— ஆனல், இவள் கூந்தலுக்கு இம்மணம் இயற்கையில் ஏற்பட்டதா, அல்லது, செயற்கையால் உண்டானதா? ... கூந்தலுக்கு இயற்கையில் மண முண்டா? ... ஏன் இராது? ... கற்புக்கனலாய் விளங் கும் எனது காதலியின் கூந்தலுக்கு இயற்கை மண மிருப்பது வியப்பல்ல,... சரி...இருக்கட்டும், யாரேனு மொருவர் இக்கருத்தை உணர்ந்து எனக்கு உண் மையை வெளிப்படுத்துவராயின், அவருக்கு ஆயிரம் பொன் பரிசில் வழங்குவதாக நகரெங்கும் பறை சாற்றச்செய்கிறேன்.

(அரசன் யோசனையிலிருப்பதைக்கண்ட அரசி)

**அரசி:—** நாதா! என்ன யோசனை?

**அரசன்:—** ஒன்று மில்லை காதலி ...

(அவளை அணைத்தபடி செல்கிறான்.)

(காட்சி முடிவு.)

## களம், 3. காட்சி. 2.

இடம்:— நகரவீதி

பாத்:-[பறைமுழக்குவோன், தருமி, நகரமாந்தர்]

(குறிப்பு) பறை முழக்கியவண்ணம் ஒருவன்வர, சிறுவர்கள் பலர் அவனைப் பின்தொடர்ந்து வருகின்றனர். நகரமாந்தர் நின்று அவன் கூறுவதைக்கேட்டுச் செல்கின்றனர்... பறை முழக்குவோன் கீழ் வருமாறு கூறிக்கொண்டு செல்கிறான்]

**பறை:** — இதனால் சகலமானபேர்களுக்கும் தெரியப்படுத்துவது என்னவென்றால், நமது மஹாராஜ ராஜ பூபதி செண்பக பாண்டிய மன்னர் அவர்கள் மனதில்ஏதோ ஒரு எண்ணம் தோன்றி அதில் சிறிது சந்தேகம் இருக்கிறதாம்... அந்தக் கருத்தையறிந்து மன்னர் பிரானுடைய சந்தேகத்தைப் போக்குவோருக்கு ஆயிரம் பொன் பரிசில் வழங்கப்படும். திறமையுள்ளவர்கள் முன் வந்து அந்த சந்தேகத்தைப் போக்கி, பரிசைப்பெற்றுப் போகலாம் ...

[பறைமுழக்குவோன் சென்றபின் நகரமாந்தர் தமக்குள் பேசிக்கொண்டு செல்கின்றனர்.]

1-வது:- ஏய்யா, அரசர் மனதிலே உள்ள சந்தேகம் நமக்கெப்படி ஐயா தெரியும்?

2-வது:- அதுக்காகத்தானே ஆயிரம் பொன் பரிசு. இல்லாப்போனா நீங்களும் வாங்கிக்கலாம், நானும் வாங்கிக்கலாமே.

1-வது:- நான் அதுக்காகச் சொல்லலே. என்னதான் திறமைசாலியாயிருந்தாலும், மனஸிலே யிருக்கறதைச் சொல்லணும்னா ஜோஸ்யம் வேறே தெரியணுமே ...

2-வது:- ஆமாமா ...

[இருவரும் செல்ல, தருமி வந்து பறையறைவதைக்கேட்டு தனக்குள்.]

தருமி:— (தனிமொழி) ஆஹா! ஆயிரம் பொன் பரிசாம் ... ஒன்று, பத்தா, நூறு? ஆயிரம் பொன் ... ஊம், ஒருயோக்யதையுமில்லாத நான் வீணாய் ஆசைப் பட்டுப்பயனென்ன ? ... வறுமையின் அவதாரமாய் விளங்கும் எனக்கு ... ஆஹா, இதையறிந்து சொல் லும்படியான சக்தி மட்டும் இருந்தால்... என்வறுமை ஒரே நாளில் பறந்து போய்விடாதா? ... ஹே சுந்தரேசா! சதா உள்ளன்புடன் உன்னைப்பூஜித்து வரும் எனக்கு விமோசனமில்லையா?... என் வாழ்க்கை முழுதும் நான் இவ்வாறு கஷ்டப்படவேண்டியது தானா?. இனி உனக்குப் பூஜை முதலிய கைங்கர்யங்களைச் செய்வதற்கு ஓர் நற்குல மங்கையை மணமுடித்து கிருஹஸ்தனாகவேண்டுமே. பிரம்மச்சாரியாயிருந்து செய்வது கூடாதே ... பரமேசா ! என் மீது உனது கடைக்கண்பார்வையைச் செலுத்தக் கூடா?

"ஆற்றோடு தும்பை யணிந்தாடுமம்பலவாணன்றன்னைப்
போற்றாதவர்க்கடையாள முண்டேயிந்தப்பூதலத்தில்
சோற்றாவியற்று சுகமற்று சுற்றத்துணியுமற்று
ஏற்றாலும் பிச்சைகிடைக்காமல் ஏக்குற்றிருப்பார்களே"

... என்றுதானே பெரியோர்கள் கூறி யிருக்கிறார்கள். உன்னை மறந்தவர்களுக்கல்லவோ அந்தக்கெதி நேர வேண்டும். எனக்கேன்நேர்ந்தது? ... கருணாமூர்த்தி யன்றோ நீ ! ஏழைபங்காளனென்று உன்னைச் சொல்லு கின்றார்களே .., ஏழையாகிய நான்படுந்துயர் எங்கும் நிறைந்த உன் கண்களுக்குத் தெரியவில்லையா? ...

[தருமி இவ்வாறு புலம்பிக்கொண்டிருக்க, ஈசன் ஓர் புலவர் உருவில் எதிரே வருகிறார்.]

**தருமி:—** ஊம், — விதி யாரை விட்டது ?

கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான்
குடிக்கத்தான் கற்பித்தானா
இல்லைத்தான் பொன்னைத்தான் எனக்குத்தான்
கொடுத்துத்தான் ரட்சித்தானா
அல்லைத்தான் சொல்லித்தான் ஆரைத்தான்
நோகத்தான் ஐயோ எங்கும்
பல்லைத்தான் திறக்கத்தான் பதுமத்தான்
புவியிற்றான் பண்ணினானே ...

**புலவர்:—** அப்பா ! நீயேன் தனிமையாக நின்று வருந்திக்கொண்டிருக்கின்றாய் ? நீ வருத்தமுறும்படி என்ன நேர்ந்தது ? — உன்னைப்பார்க்க மிகவும் பரிதாப நிலையிலிருப்பவனைப்போல் தோற்றுகிறது — காரணத்தை நானறியலாமோ ?

**தருமி:—** ஐயா, பெரியவரே, உம்மிடத்தில் சொல்லி என் கஷ்டம் தீர்ந்துவிடப்போகிறதா ? ...

ஊம், நான் செய்த வினையை அனுபவித்துத்தானே

**புலவர்:**— அப்பா, தயங்காமல் சொல். என்னால் தீர்க்கமுடியுமாவென்று பார்க்கிறேன். ...

**தருமி:**— ஐயா, சற்றுமுன் அரசர் உத்திரவினால் பறை சாற்றியதைக் கேட்டேன், அதுமுதல் என் மனம் மிகவும் தத்தளிக்கிறது.

**புலவர்:**— ஓ! ... இப்பொழுது முழக்கிக் கொண்டு சென்றானே ...

**தருமி:**— ஆம்.

**புலவர்:**— அதற்கும் நீ வருந்துவதற்கும் என்ன சம்பந்தம் ?

**தருமி:**— என்னையா இப்படிக் கேட்கிறீர் ? — ஆயிரம் பொன் கிடைப்பதென்றால் சாதாரணமான விஷயமா ? — " கடலின் ஆழத்தைக்காணலாம், பெண்களுடைய ஹிருதயத்தையுங்காணலாம், ஆனால், என்னில் குடிகொண்டிருக்கும் வறுமையின் எல்லையை உம்மால் காணவே முடியாது. மற்றவர்களைப்போல் நானும் ஒரு கிருஹஸ்தனாவது எப்படி ? — இந்த நிலைமையில் நான் அரசருடைய சந்தேகத்தை நிவர்த்தி செய்யும் சக்தியைப்பெற்றிருந்தால் — ஆஹா – ஆயிரம் பொன் ... எவ்வளவு பாக்யசாலியாயிருப்பேன் ...

**புலவர்:**— அப்பா, நீ அந்தப் பொற்கிழியைப் பெறும்படியாக ஒரு செய்யுள் எழுதி உன்னிடம்

கொடுக்கிறேன். நீ அதைக் கொண்டுபோய் மன்ன னிடம் கொடுத்துப் பரிசைப் பெற்றுக்கொள்ளுகிறாயா?

**தருமி:—** (வியப்புற்று) உண்மையாகவா ! ... எனக்கு அந்தப் பொற்கிழி கிடைக்கும்படியாகவா? ...

**புலவர்:—** ஆம்.

**தருமி:—** நம்பவே முடியவில்லையே ...

**புலவர்:—** ஏன் ...

**தருமி:—** அந்த சக்தி உங்களுக்கிருந்தால் நீங் களே அந்தப் பரிசைப் பெற்றுக்கொள்ளலாமே ... அதை விட்டு ...

**புலவர்:—** (இடை மறித்து) அப்பா ! இந்த உலகத்தில் நான் அனுபவிக்கவேண்டிய இன்பங்களை யெல்லாம் அனுபவித்துவிட்டேன். இனி எனக் கொன்றும் வேண்டியதில்லை. — நீயோ பிரம்மச்சாரி. இன்னும் வாழ்க்கை யின்பங்களையறியாதவன். அதைக் கருதியே உனக்கு இதைக் கொடுக்க முன் வந்தேனே யன்றி வேறல்ல.

**தருமி:—** ஆஹா, நான் செய்த பாக்யமே பாக் யம். ஐயா புலவரே, சோமசுந்தரக்கடவுளுக்குச் சமதையாய்த் தங்களை மதிக்கிறேன். சீக்கிரம் எழு திக்கொடும். இப்பொழுதே போகிறேன்.

[புலவர் ஓர் செய்யுளெழுதி தருமியிடமளிக்க தருமி அதை வணக்கத்துடன் பெற்றுக் கொள்கிறான்.]

தருமி:— ஐயா! உம்மை நான் என்னுயுள் முழுதும் மறக்கவே மாட்டேன். வரட்டுமா ... நிச்சயமாய்க் கிடைக்குமா? ...

புலவர்:— சந்தேகமே வேண்டாம். சென்றுவா.

(தருமி களிப்புடன் விரைந்து செல்ல, புலவர் மறுபுறம் செல்கிறார்.)

## களம் 3. காட்சி 3.

இடம்:-செண்பகபாண்டியன் கொலுமண்டபம்.

பாத்:—[பாண்டியன், அரசி, நக்கீரர், புலவர்கள், தருமி, காவலர், பணிப்பெண்கள்]

(குறிப்பு) [புலவர்கள், காவலர்கள் முதலியோர் இருமருங்கிலும் கை கூப்பியபடி நிற்கிறார்கள். அரசனும் அரசியும் சிங்காதனத்தின் மீது நின்று "இறை வணக்கம்" செய்கின்றனர்.]

= சபையோர் =

வீடலால வாயிலாய் விழுமியார்க ணின்கழற்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே,
காடலால வாயிலாய் கவாலி நீள்கடிமதிற்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே.

(தேவாரப்பண்)

(குறிப்பு) [அரசன் அமர, மற்றவரும் தந்தம் ருக்கையில் அமருகின்றனர்.]

**பாண்:**— நற்கீரரே! புலவர்களே, என்னுளத்தில் தோன்றிய ஐயத்தினைப் போக்குபவர்களுக்கு ஆயிரம் பொன் பரிசில் வழங்குவதாக நாடெங்கணும் பறைசாற்றச் செய்தேன். இன்னும் ஒருவரேனும் அப்பரிசினைப்பெற முன் வந்தாரில்லையே. தம்போன்ற அரும் பெரும் புலவர்கள் நிறைந்துள்ள இக்கூடலம் பதியில் எனதையத்தைத் தெளிவிப்பார் ஒருவருமில்லாமலா போய்விட்டார்?

**நற்கீ:**— (எழுந்து) அரசே! சங்கப்புலவர்கள் குழுமியுள்ள இச்சபையின்கண் தாங்கள் இங்ஙன முரைத்தல் அழகன்று. பொற்கிழியை யடைய விருப்பமுடையோர் மட்டுமே இப்போட்டியிற் கலந்துகொள்வார்களென்பது தாங்களறிந்ததுதானே. சிறந்த புலவர்கள் பலருக்குப் பொற்கிழிபெற விருப்பமில்லாதிருக்கலாம். ஆகவே, இதனைக்கொண்டு புலவர்களின் திறமையை மதிப்பிடுதல் சரியன்று.

**பாண்:**— நற்கீரரே, சங்கப்புலவர்களின் கடவுற்றன்மையையும், அருந்திறமையையும், யான் நன்குணர்ந்திருக்கின்றேன். ... உங்களை இழிவுபடுத்த வேண்டுமென்ற நோக்கங்கொண்டு யான் இம்மொழியைக்கூறியதாக எண்ணவேண்டாம். அமருங்கள். ...

(ஓர் காவலன் வந்து வணங்கி)

**காவ:**—மன்னர்பிரானே, ஓர் ஏழைப்பிரம்மச்சாரி சமுகத்தைக் காணக்காத்துக் கொண்டிருக்கிறார். உத்திரவு ...

(குறிப்பு) [மன்னன் தலையசைத்து சைகைசெய்ய, காவலன் செல்கிறான். தருமி வந்து திகைப்புடன் சுற்று முற்றும் பார்த்து நிற்கிறான்].

**பாண்டி:—** இளைஞரே, நீவிர் யாது காரணம் பற்றி அவையை நாடி வந்தது?... விளம்புவீர்.

**தருமி:—** (சற்று நிதானித்து) அரசே; தாங்கள் பறையறைவித்தபடி தங்கள் மனத்திலுள்ள சந்தேகத்தை நிவர்த்தி செய்யும் ஓர் கவியுடன் வந்திருக்கின்றேன்.

(அரசனுள்ளிட்ட சபையோர் வியப்புறுகின்றனர்.)

**பாண்:—** அப்படியா! அங்ஙனமாயின் அக் கவியை அவையின் முன் எடுத்துக்கூறி குறித்தபடி நாம பொற்கிழியைப் பரிசாகப் பெற்றுச்செல்லலாம்.

**தருமி:—** (கவியைப்படிக்கிறான்).

**“கொங்கு தேர் வாழ்க்கை யஞ்சிறைத்தும்பி**
**காமஞ்செப்பாது கண்டது மொழிமோ**
**பயிலியது கெழீ இய நட்பின்**
**மயிலியற் செறியெயிற்றரிவை கூந்தலி**
**னறியவுமுளவோ! நீயறியும் பூவே” ...**

(குறிப்பு) [நக்கீரர் மட்டும் யோசனைசெய்ய, மற்ற புலவர்கள் தலையசைத்து ஆமோதிக்கின்றனர்.]

**ஓர் புல:—** அரசே, சொற்சுவை பொருட்சுவையுடன் கவி மிக அழகாக அமைந்திருக்கின்றது.

**மற்றவர் :—** ஆம் ... ஆம் .... ஒப்புக்கொள்ளக் கூடியதே ...

**பாண்:**—புலவர்களே, இக்கவியின் கருத்திஞல் யான்கொண்டிருந்த ஐயமும் தீர்ந்து விட்டது. இவ் விளைஞருக்குப் பொற்கிழியை வழங்கலாமென நினைக் கின்றேன்.

**மற்ற:**— வேந்தே, அங்ஙனமே செய்யலாம்.

[மன்னன் சைகைசெய்ய அமைச்சர் பொற் கிழியைக்கொண்டுவரச் செல்கிருர்]

**நற்கீ:**— (தருமியை நோக்கி) இளைஞரே, அக் கவியை மற்ருேர் முறை கூறும்.

(தருமி அவ்வாறே கூற, அமைச்சர் பொற் கிழியுடன்வருகிருர். மன்னன் அதைவாங்கி)

**பாண்:**— (தருமியைநோக்கி) இளைஞரே, வருக, பெற்றுக்கொள்ளும்.

[அரசன் தருமியிடம் பொற்கிழியைக் கொடுக் கும் சமயம் நக்கீரர் தடுத்து]

**நற்கீ:**— அரசே, சற்று பொறுக்கவேண்டும். — பொன் முடிப்பை இவ்விளைஞருக்குக் கொடுப்பது முறையன்று.

(சபையோர் வியப்புடன் இருக்க)

**பாண்:**— என் ?

**நற்கீ:**— இச்செய்யுள் குற்றமுடையது. ஆகை யால், பொற்கிழியை யடைவதற்கு இவ்விளைஞர் தகுதி யுடையவரல்ல.

**பாண்:**-(யோசித்து) செய்யுள் குற்றமுடைத்தா! அங்ஙனமாயின், கொடுப்பது சரியன்று. ...

**தருமி:**— (ஆத்திரத்தோடு) (தனிமொழி) ஆறொ ! கைக்கு எட்டியது வாய்க்கெட்டாமல் போயிற்றே. (வெளிப்படை) ஓய் நக்கீரப்புலவரே, கொடுப்பதைத் தடுப்பதைப்போல் மகா பாபம் வேறொன்றுமில்லை ஐயா ... இதிலென்னையா குற்றத் தைக் கண்டீர் ? ...

**நற்:**— இளைஞரே, இஃது நகையின்பாற் பட்ட தன்று, ... மன்னர் உமக்கு மனமுவந்தளிப்பதை யான் தடை செய்தேனல்லேன். இப்பொற்கிழியானது இங்குள்ள புலவர்களின் புலமைத்தன்மையை வெளிக் காட்ட ஏற்படுத்தப்பட்ட போட்டிப்பரிசில். ஆகவே, உமது செய்யுள் குற்றமற்றதென விளக்கிக்காட்டி, பொன்முடிப்பைப் பெற்றுச்செல்வதில் தடையொன்று மில்லை.

**தருமி:**— (தனிமொழி) ஊம், கவி குற்றமுடை யதுதானு, சரிதானுவென்று சொல்வதற்கு எனக்கு என்ன எழவு தெரியும், ... (வெளிப்படையாக) ஓய் நக்கீரப்புலவரே, என் வயிற்றெரிச்சல் ஒருநாளும் வீண் போகாது. எல்லாம் வல்ல இறைவன் உமக்கு நிச்சயமாகக் கூலி கொடுப்பாரையா. ...

(போகிறுன்.)

(காட்சி முடிவு.)

## களம் 3. காட்சி 4.

**இடம்:**— நகரவீதி

**பாத்:**— [ தருமி, புலவர் ]

(குறிப்பு) (தருமிமிகுந்த வருத்தத்துடன் வருதல்)

**தருமி:**—(தனக்குள்) ஹே சுந்தரேஸா! மீனாக்ஷி ரமணா! பசியோடிருப்பவனை இலையில் உட்கார வைத்து, சாப்பிட ஆரம்பித்தவுடன் கையைப்பிடித்திழுத்து வெளியில் விட்டது போலாய்விட்டதே என்னுடைய நிலைமை ... பெரியவர் எழுதிக்கொடுத்த கவி சரியாயிருக்குமென்று நம்பி, பணமடையலாமென்ற எண்ணத்துடன் சென்றேனே...என்னைப்பிடித்த சனியன் என் பின்னாலேயே வந்து நற்கிரர் வாக்கிலிருந்து கவியைக்குற்றமுடையதென்று தள்ளிவிட்டானே ... எழுதிக்கொடுத்த புலவரையாவது கேட்கலாமென்றால் அவர் எந்த ஊரோ, எங்கிருப்பவரோ, ஒன்றுந்தெரியாதே ... ஊம் வீணாய் அவரைநொந்து பயனென்ன? அவ்வளவுதான் நம்முடைய அதிர்ஷ்டம். சுந்தரேஸா! வறுமையில் வாடிமெலியும் எனக்கு இந்த அவமானத்தையும் உண்டாக்கவேண்டுமா? ...

(புலவர் வருகிறார்)

... அடடா! நினைத்தவுடனே வந்துவிட்டீரே ... ... உமக்கு ஆயுஸு நூறையா.

**புலவர்:**— என்னப்பா, பொற்கிழி கிடைத்ததா? உன்வறுமை தீர்ந்ததா? ...

**தருமி:—** ஆஹா, என் வறுமை தீர்ந்தது. உம்முடைய மநஸு குளிர்ந்ததா ... ஏனையா நான் ராஜ சபையிலேபோய் அவமானப்பட்டதிலே உமக் கென்னையா கிடைத்தது?

**புலவர்:—** (வியப்புடன்) என்ன ! ராஜசபையில் அவமானமா ! உனக்கா ?

**தருமி:—** வறுமையால் வாடி மெலியும் ஏழை களைக் கஷ்டப்படுத்தி வேடிக்கை பார்க்கும் புண்யாத் மாக்களில் நீரும் ஒருவரென்று தெரிந்திருந்தால் நான் உம்மிடத்தில் விஷயத்தையே சொல்லியிருக்கமாட் டேனே. — இப்படிச் செய்ததில் உமக்கென்னையா லாபம் ?

**புலவர்:—** என்னப்பாயிது, நீ சொல்வதொன் றும் விளங்கவில்லையே, பொற்கிழி உனக்குக் கிடைக்க வில்லையா ?

**தருமி:—** பொற்கிழியா ! ஊம் ... இன்னும் கொஞ்சநேரம் அங்கே நின்றிருந்தால் முதுகில் கிடைத்திருக்கும் ... உம்மையெல்லாம் யாரையா கவி எழுதச்சொன்னது ? ... நான் வந்து உம்மிடம் ஏதாவது கொடுமென்று கேட்டேனா ? நீராக வந்தீர், என் நிலைமையைக்கேட்டீர், ரொம்பப் பரிதாபப்பட்டீர், ஏதோ எழுதிக்கொடுத்தீர்...பெரிய புலவர் மாதிரி ...

**புலவர்:—** அப்பா! ஆத்திரப்படாதே. பொறு மையாய்ச்சொல். அங்கு என்ன நடந்தது?

**தருமி:—** என்ன நடந்தது ! ... கவியைக் குற்ற முடையதென்று தள்ளிவிட்டார்களோயா.

**புலவர்:—** (கோபத்துடன்) என்ன! கவி குற்ற முடையதா, யார் கூறியது? என்ன குற்றம்?...

**தருமி:—** ஊம் ... என்ன குற்றமென்று சொல்ல எனக்குத்தெரிந்திருந்தால் நான் ஏன் இப்படி இந்த ஸ்திதியில் இருக்கிறேன். கவியை எழுதியது நீர் ... குற்றம் சொன்னவர் அங்கேயிருக்கிற புலவர் ... என் னிடத்தில் கேட்டால் எனக்கென்னதெரியும்?

**புலவர்:—**சரி. என்னுடன்வா, நானும் உன்னோடு அரசசபைக்கு வருகிறேன்.

**தருமி:—** வேண்டாமையா. நீர் சரியாய்த்தான் எழுதிக்கொடுத்திருப்பீர் ... நான் அவமானப்பட்ட வயிற்றெரிச்சலில் உம்மை ஏதேதோ பேசிவிட்டேன். மன்னித்துக்கொள்ளும்...உம்முடைய கவி சரியாயிருந் தாலும் என்னுடைய காலபலன் சரியாயில்லை...வேண் டாம். வீணாய் உமக்கும் அவமானம் ஏற்பட்டுவிடும்.

**புலவர்:—** (கோபத்தோடு) வா, என்னோடு ...

[ தருமியின் கையைப்பிடித்து இழுத்துக் கொண்டு விரைந்து செல்கிறார் ]

(காட்சி முடிவு).

## களம் 3. காட்சி 5.

**இடம்:—** சங்கமண்டபம்.

**பாத்:—**[பாண்டியன், புலவர்கள், தருமி, புலவர் ஈசன், நக்கீரர்]

(குறிப்பு) [பாண்டியன், புலவர்களுடனுடன் பேசிக்கொண்டிருக்கிறான் ... "ஈசன்" புலவர் உருவில் தருமியுடன் விரைந்து வருகிறார். எல்லோரும் திடுக்கிட்டு எழுந்து நிற்கின்றனர்.]

**புலவர்:—** (மிகுந்தகோபத்துடன்) ஹே புலவர்களே! இவ்வேழை பிரமச்சாரியின்மூலம் யானனுப்பிய கவிக்குக்குற்றங் கூறியவர் யார்?

**நற்கீ:—** (பொறுமையுடன்) ஐயா புலவரே! நீர்தாமோ அச்செய்யுளை இயற்றியவர்? ... குறைகூறியவன் யானே.

**புலவர்:—** ஓஹோ! நற்கீரரா...நீரா கூறினீர்?. ஆம், சங்கத்தலைவராகிய உம்மையன்றி வேறுயார் கூறியிருக்கமுடியும் ... ஆனால், செய்யுள் குற்றமுடையதுதானோ? ... நன்றாய் யோசித்துக்கூறும்.

**நற்கீ:—**(புன்நகையுடன்) யோசனையின்றி உரைப்பவன் நற்கீரனன்று. உறுதியுடன் கூறுகின்றேன். செய்யுளில் குற்றமிருக்கின்றது.

**புலவர்:—** (கண்கள் சிவக்க) குற்றமா! ... இருக்கின்றதா! ...

**நற்கீ:—** (உறுதியுடன்) ஆம்.

**புலவர்:—**சொற்சுவையிலா? அன்றி, பொருட்சுவையிலா?

**நற்கீ :—** சொற்குற்றமில்லை. 'பொருளிற்றான் குற்றமிருக்கின்றது.

**புலவர்:**— அக்குற்றந்தானென்னை? சொல்லும்.

**நக்கீ:**— எங்கே, நீரியற்றிய செய்யுளைக்கூறும்.

(புலவர் செய்யுளைக் கூறிவிட்டு)

**புலவர்:**-கவியில் என்னையா குற்றம்?.. சொல்லும்.

**நக்கீ:**— ஆம். குற்றமே. தலைவன் தலைவியை நெருங்கும் பொருட்டு அவளது அழகைப்புகழ்ந்து வண்டை நோக்கிக்கூறும் துறையில் இச்செய்யுள் இயற்றப்பட்டிருக்கின்றது ... (செய்யுளைக்கூறி). அதாவது, "மலர்களிடத்தே மகரந்தப்பொடியை ஆராய்ந்து கொண்டிருக்கிற தும்பியினத்தைச்சேர்ந்த உயர் குலத்து வண்டே! நீ அறிந்துள்ள பூக்களிலே இவள் கூந்தலைக் காட்டிலும் நறுமணமுடைய மலர்களுண்டோ" வென்றுகேட்பதாக உமது கவியிற் சொல்லப்பட்டுள்ளது. அதுவே யான் குறிப்பிடுவது அதுவே பெருங்குற்றம். கூந்தலுக்கு நறுமணமலர்களின் சேர்க்கையாலன்றி இயற்கையில் மணமேது? ...

(எல்லோரும் வியப்புறுதல்)

... உமது செய்யுளில் கூந்தல் மலர்களைக்காட்டிலும் மணமுடையதென்று சொல்லப்பட்டிருக்கிறதே, இஃது பெருங்குற்றமென்பதில் ஐயமுண்டோ? ...

**புலவர்:**— நற்கீரரே! வெகு நன்றாயிருக்கிறது உமது புலமைத்திறம். உத்தம ஜாதிப்பெண்களாகிய "பத்மினி" ப்பெண்களுக்கும் செயற்கையாலன்றி இயற்கையில் மணங்கிடையாதோ?

**நற்கீ:**— கிடையாது. கற்புக்கனலாய் விளங்கும் காதலியின் கூந்தலுக்கும் செயற்கையில்தான் மணமுண்டு ... கூந்தலுக்கு மணமுண்டென்பது இயற்கைக்கு முரணாகும்.

**புலவர்:**— தெய்வீகக் காதல்கொள்ளும் தேவப் பெண்களுக்கும் அப்படித்தானே ?

**நற்கீ:**— ஆம். இயற்கை விதியே அதுதான்.

**புலவர்:**— நற்கீரரே ! நீர் வழிபடும் அன்புக் கடவுளின் இடப்பாகத்தில் அமர்ந்துள்ள, அருள் வடிவாயிலங்கும் பார்வதி தேவியின் கூந்தலுக்காவது இயற்கை மணமிருக்கவேண்டுமல்லவா ?

**நற்கீ:**— இருக்கவே முடியாது. சகல உயிர்களுக்கும் சக்தியைக்கொடுத்துக் காப்பாற்றிவரும் உலக மாதாவாகிய அம்பிகைக்கும் தன் கூந்தலிலணிந்து கொண்டிருக்கிற நறுமலர்களின் சேர்க்கையாலன்றி இயற்கையில் மணம் கிடையாது ... முக்காலும் கிடையாது.

**புலவர்:**— நக்கீரா ! குற்றந்தானா ? ... (நெற்றிக் கண் திறந்து காட்டுதல்)

**நற்கீ:**— (உறுதியுடன்) புலவரே ! நீரே முக்கண் முதல்வனாயினுமாகுக.

" உமது நெற்றியிற் காட்டிய கண்ணைப்போல், உடம்பெல்லாம் கண்ணாக்கிச் சுட்டாலும், உமது கவியிற் குற்றம் குற்றமே. " ...

**" நெற்றிக்கண் திறக்கினுங் குற்றங் குற்றமே. "**

## வெண்பா.

ஈசன்:—

"அங்கங்குலைய அருவாளில் நெய்பூசி
பங்கம்பட விரண்டு கால் பரப்பிச் — சங்கதனைக்
கீர் கிரெனவறுக்கும் கீரனோவென் கவியை
ஆராயுமுள்ளத்தவன்"

நற்கீரர்:—

சங்கறுப்பதெங்கள் குலம் சங்கரனார்க்கேது குலம்
பங்கமறச் சொன்னால் பழுதாமே — சங்கை
அரிந்துண்டு வாழ்வோமரனே யுனைப்போல
இரந்துண்டு வாழ்வதில்லை."

(குறிப்பு) [புலவர் உருமாறி ஈசன் தோன்றி, நெற்றிக்கண்ணால் நற்கீரரை எரிக்க, நற்கீரர் வெப்பம் தாளாது பொற்றாமரையில் விழுகிறார். எல்லோரும் "சம்போ மகாதேவா" என்று கரங்கூப்பி நிற்கின்றனர்.]

(காட்சி மாறுகிறது.)

## களம். 3 காட்சி. 6.

இடம்:— பொற்றாமரைக்குளம்

பாத்:—[நற்கீரர், அரசன், புலவர்கள், ஈசன்]

(குறிப்பு) [அரசன், புலவர்கள் முதலியோர் கரையில் நின்று சிவபெருமானைத் துதிக்கின்றனர்].

கபிலர்:—; ஹே சோமசுந்தரப் பெருமானே; எங்கள் சங்கத்தின்றலைவராகிய நற்கீரரைப் பொற்றாமரையிற்றள்ளி தண்டித்தது முறையே யெனினும்,

## சிவலீலா.

அடியார்களாகிய எமது வேண்டுகோட்கிரங்கி, அவரைக்கரையேற்றுமாறு மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறோம். நற்கீரரில்லாத எமது சபை, தாமரையில்லாத்தடாகம்போலும், சந்திரனில்லா வானம்போலும் விளங்குகிறது.... மழையின்றி வாடும் பயிரைப்போல, புலவர்களாகிய நாங்கள் எங்கள் தலைவரைக்காணுது தத்தளிக்கின்றோம். பிறவிப்பெருங்கடலினின்றும் மக்களைக்கரையேற்றும் வள்ளலாகியதாம் எமது சங்கத்தின் ஒப்பற்ற தலைவரைக் கரையேற்றியருளவேண்டுகிறோம்.

[ பொற்றாமரையின் நடுவே சிவபெருமான் தோன்றி தமது திருக்கையைக்காண்பித்து ]

**சிவபெரு:—** நற்கீரரே ! பொற்றாமரையினின்றும் வெளிவருவீராக...

[நற்கீரர் இருகரமுங்கூப்பியவாறு கரையேறி வந்து, ஈசனை நோக்கி].

**நற்கீ:—**

| | |
|---|---|
| ஊழியும் நீயே | உலகமும் நீயே |
| வாழியும் நீயே | வரதனும் நீயே |
| தேவரும் நீயே | தீர்த்தமும் நீயே |
| மூவரும் நீயே | முன்னெறி நீயே |
| மால்வரை நீயே | மறிகடல் நீயே |
| இன்பமும் நீயே | துன்பமும் நீயே |
| தாயும் நீயே | தந்தையும் நீயே |
| விண்முதற்பூதம் | ஐந்தவை நீயே |
| பத்தியும் நீயே | முத்தியும் நீயே |
| சொலற்கருந்தன்மைத் | தொல்லோய் நீயே.... |

...எம்பெருமானே! முக்கண் முதல்வனே! கல்வியிற் சிறந்தவன் என்ற இறுமாப்பினலும், செய்வதின்னது தான் என்று தெரியாத அறியாமையினலும், மாயைக் குட்சிக்கி, தங்கள் செய்யுளுக்குக்கூடக் குற்றங்கூறி யதைப் பொறுத்து என்னைக்கரையேற்றி ஆட்கொண் டருளிய தமது தனிப்பெருங்கருணையை என்னென் பேன்! "அடியார்க்கெளியன்" எனும் பெயர் தமக்கு மிகவும் ஏற்றதன்றோ? ... அன்புருவே! அமிழ்தினு மினிய என்னருந் தமிழ் மொழியின்பால் யான்கொண் டுள்ள "பக்தி" காரணமாக, செந்தமிழ்ச்செய்யுளில் பொருட்குற்றம் ஏற்படலாகாதே யெனவெண்ணி மயங்கிவிட்டேன். பரம்பொருளே! பொறுத்தருள வேண்டும்.

**சிவபெரு:—** நக்கீரரே! உமது கல்வியின் திற மையையும், நம்பால் வைத்துள்ள பக்தியையுங்கண்டு யாம் அகமகிழ்ந்தோம். புலவராக வந்தவர்யாமே யென்பதையறிந்தும் நீர் சிறிதும் கலங்கா உள்ளத் துடன் எம்மோடு எதிருரையாடியது உமக்குத்தனிப் பெருஞ்சிறப்பையுண்டாக்கியது. இன்று உமக்கேற் பட்டுள்ள இந்தப் புகழ் இவ்வுலகுள்ளளவும், என் றும் அழியாது நிலைபெற்றிருக்குமாக ... இனி நீர் சிறிது காலம் பொதிகைசென்று அகத்திய முனி வரோடு கலந்துகொள்வது உமக்குச்சாலவும் சிறப் பைத்தரும். சென்றுவருக. மங்களமுண்டாகட்டும்.

(சிவபெருமான் மறைகிறார்.)

(காட்சி மாறுகிறது.)

## களம் 3. காட்சி 7.

**இடம்:—** சங்கமண்டபம்

**பாத்:—** [புலவர்கள், தருமி, பாண்டியன்].

**நற்கீ:—** அரசே ! தமது சங்கத்தலைவனுக யான் வீற்றிருந்தமையினுற்றுன் எனக்கு இப்பெரும் பேறு கிடைத்தது. எந்தையின் அன்புக்குப் பாத்திரமான இவ்விளைஞருக்கு ஆயிரம் பொன்கொண்ட முடிப்பை யளிப்பதோடு, மற்றும் வேண்டிய பரிசுகளும் வழங்குமாறு வேண்டுகிறேன். இவருடைய புண்ணியத் திஞலேயன்றே, அரியும் அயனுங்காணமுடியாத எம்பிரானை நாமெல்லோரும் நேரில் கண்டுகளிக்கும்படியான பேற்றினையடைந்தோம், இவரே பெரியார் ... இவரே சிறந்தவர் ... எவ்வளவு கல்வியுடையவரா யிருந்தாலென்ன ... எவ்வளவு செல்வமுடையவரா யிருந்தாலென்ன ? அரசராயிருந்தாலென்ன, ஆண்டியாயிருந்தாலென்ன? ... துறவியாயிருந்தாலென்ன, துட்டனுயிருந்தாலென்ன? ... "கங்கை வார்சடைக்—கரந்தார்க்கன்பராகில், அவர்கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே".

[ அரசன் பொற்கிழியை நற்கீரரிடமளிக்க அவர் அதை தருமியிடம் கொடுக்கிறுர்].

**தருமி:—** (மகிழ்வுடன் பெற்றுக்கொண்டு) ஹே சுந்தரேஸா!உனது கருணையை நான் ஏன்றும் மறவேன்.

[**ஆநந்தக்கண்ணீர் சொரிய, அனைவரையும் வணங்கிச் செல்கிறுன்.**]

**நற்கீ:—** *அரசே, புலவர்களே ! யான் ஈசன் கட்டளைப்படி அகத்தியமுனிவரைக்கண்டு வருகிறேன். விடை யளியுங்கள்:—*

**பாண்:—** *(கண் கலங்க) நற்கீரரே ! தங்களை எங்ஙனம் விட்டுப்பிரிவோம். எங்களுள்ளம் விதிர்ப்புறுகின்றதே. என் செய்வோம் ...*

*[நக்கீரர் புலவர்களைத்தழுவிக்கொண்டு விடை பெற எல்லோரும் கண்ணீர் விடுகின்றனர்]*

**நக்கீ:—** *புலவீர் ! விரைவில் வந்து சேருகின்றேன் ... இப்பாவியை மறந்துவிடவேண்டாம் ... தமிழ் வாழ்க ... தமிழ் வாழ்க ... உலகெலாந்தமிழ் முழங்கட்டும் ...*

**எல்லோ:- உலகெலாந்தமிழ் முழங்கட்டும், உலகெலாந்தமிழ் முழங்கட்டும் ...**

*(நற்கீரர் செல்கிறார்.)*

(காட்சி முடிவு.)

# "சங்கப்புலவர்கள் சண்டை தீர்த்த படலம்."

## களம் 4. காட்சி 1.

இடம்:— சங்க மண்டபம்.

பாத்:— [புலவர்கள், அசரீரி (ஈசன்)]

(குறிப்பு) [புலவர்கள் தலைமைப்பதவிக்காக சச்சர விட்டுக்கொண்டிருக்கின்றார்கள்.]

**கபிலர்:**— சங்கப்புலவர்கள் ஒருவர்க்கொருவர் சச்சரவிட்டுக்கொள்கின்றனரென்றால், அந்த இழிச் சொல் நம்மெல்லோரையும் சேர்ந்ததே.

**பாணர்:**— அதுமட்டுமல்ல. தமிழ்ப்புலவர்கள் தலைமைக்காக போட்டியிடுகிறார்களென்றால், அது தமிழுக்கே இழுக்கையுண்டாக்கும். நம்மில் யார் தலைவராகயிருந்தாலென்ன?

**சாத்தனார்:**— அப்படியல்ல, அனைவரும் கல்வி யிற் சிறந்தவர்களே யெனினும், நம்மில் மேம்பட்ட அறிவாற்றலுடைய ஒருவரைத் தலைவராகத் தெரிந் தெடுப்பதே சாலச்சிறந்தது ...

**கபிலர்:**— அதைத்தான் இத்தனை நாட்களாகக் கூறியாயிற்றே. இறுதி காணுவது இயலாதுபோற் றோன்றுகிறதே.

**கல்லாடனார்:**— சங்கத் தலைமைப்பதவி புலமை யின் அளவுகோலாகவிருக்கும்பொழுது அதனை விட் டுக்கொடுப்பதெங்ஙனம்?

**பாணர்:—** ஊம் ... நற்கீரரிருந்திருந்தால் இந்த சச்சரவே ஏற்பட்டிராது ...

**சாத்தனுர்:**-நடக்கவேண்டியதைப்பற்றிப் பேசுங்கள். சென்றதினி மீளுமா ?

**கபிலர்:—** நம்மில் உயர்ந்த செய்யுள் எழுதுபவருக்கு தலைமைப்பதவி கொடுக்கலாமென்று எல்லோரும் ஒப்புக்கொண்டீர்கள். அதன்படி நாமனைவரும் செய்யுட்களியற்றினோம். இப்பொழுது ஒவ்வொருவரும் தந்தம் செய்யுளே மேன்மையுடையதென்று சண்டையிட்டுக்கொள்ளுகின்றீர்கள். இதற்கு முடிவு காணுவதெப்படி ? நம்மெல்லோருடைய செய்யுட்களையும் ஆராய்ந்து, நடுநிலைமையிலிருந்து தீர்ப்புக் கூறத்தக்க ஆற்றலுடையவர் அகத்தியனரையும், நற்கீரரையும் தவிர, வேறொருவரும் இருப்பதாகத் தெரியவில்லை. இந்நிலை மிகவும் வருந்தத்தக்கதே. மனிதர்களால் இச்சண்டை தீருமென எனக்குத் தோன்றவில்லை ...

**பாணர்:—** ஆம், ஆம். இறைவனே வந்து இந்த இடுக்கணைத் தீர்த்தாலன்றி வேறு வழியில்லை.

**சாத்தனுர்:—** சங்கத்தைத் தோற்றுவித்த எம் பெருமான் சங்கம் நீடூழி வாழ அருள்புரியட்டும். எல்லோரும் சோமசுந்தரக்கடவுளை வேண்டுவோம்.

[புலவர்கள் தோத்திரப்பாடல் பாடுகின்றனர். பாட்டு முடிந்ததும், ஈசன் அசரீரியாக,]

**பேரொலி:—** ஹே! புலவர்களே, இவ்வூரில் வசித்துவரும் தனபதி செட்டியாரென்பவருக்கு ஓர் அருமைக்குமாரன் ஊமையாகப் பிறந்திருக்கின்றான். நீங்கள் சென்று அவனைத் தக்க மரியாதையோடிங் கழைத்துவந்து, உங்களுடைய செய்யுட்களைத் தனித் தனியே காண்பித்தால் அவன் உங்கள் சச்சரவைத் தீர்ப்பான்.

**பரனார்:—** கருணைக்கடலே! எங்களுடைய சச்சரவை ஓர் ஊமைப்பிள்ளை தீர்த்துவிடுவானெனத் திருவாக்கினின்றும் உதித்தது எங்களுக்கு விளங்கவில்லையே.

**பேரொலி:-** புலவர்களே! அக்குழந்தை மானிடக் குழந்தையல்ல. தெய்வத்தன்மை பொருந்தியது. உங்கள் சச்சரவை எம்மைவிட அவனே தீர்க்கவல்லோன்.

**புலவர்கள்:—** ஆஹா...... எம்பெருமானின் கருணையே கருணை!

(காட்சி முடிவு).

## களம் 4. காட்சி 2.

**இடம்:—** நகரவீதி

**பாத்:-** [புலவர்கள் ஊமைப்பிள்ளை, நகரமாந்தர்]

(குறிப்பு) மேளவாத்தியங்கள் முழங்க, ராஜமரியாதையுடன், புலவர்கள் "ஊமைப்பிள்ளை" யைப் பல்லக்கில் வைத்துச் சுமந்து செல்கின்றனர்.]

(காட்சி முடிவு.)

## களம் 4. காட்சி 3.

**இடம்:**— சங்கமண்டபம்

**பாத்:**— [புலவர்கள், ஊமைப்பிள்ளை]

(குறிப்பு) ["ஊமைப்பிள்ளை"யை ஓர் உயர்ந்த பீடத்திலிருத்தி புலவர்கள் இருமருங்கிலும் நிற்கின்றனர். ஊமைப்பிள்ளை சைகைசெய்ய, புலவர்கள் ஒவ்வொருவராக தமது செய்யுட்களைக்கொடுக்கின்றனர். ஊமைப்பிள்ளை மற்றெல்லோருடைய செய்யுட்களையும் தூர எறிந்துவிட்டு "கபிலர், பரணர்," இருவருடைய செய்யுட்களையும், கண்ணிலொற்றிக் கொண்டு, ஆநந்தக்கண்ணீர் சொரியத் தலையசைக்கிறான்].

**மற்றபுலவர்கள்:**— (கபிலரையும் பரணரையும் நோக்கி)... நீங்களே பெரியவர்கள், நீங்களே பெரியவர்கள்.

**சாத்தனார்:**— எங்களைவிட நீங்களே பலவகையிலும் சிறப்புடையவர்களென்பதை மனமார ஒப்புக்கொள்கின்றோம். இனி நமக்குள் ஒற்றுமையாய் வாழ்வோம்.

**கபி-பர:**— **அமிழ்தினுமினிய தமிழ் மொழி வாழ்க!**

**எல்:**— வாழ்க, வாழ்க!

**கபி-பர:**— தமிழ்த்தாயீன்ற தமிழ்ச்சங்கம் வாழ்க!

**எல்:—** வாழ்க, வாழ்க !

**கபி:-பா:—** கலகம் தீர்த்த காருண்யன் வாழ்க !

**எல்லோ:—** வாழ்க, வாழ்க !

["ஊமைப்பிள்ளை" மறைய, ஸ்ரீ முருகக்கடவுள் மயில் வாகனத்தில் காட்சி யளிக்கிறார். புலவர்கள் வணங்குகின்றனர்.]

**முருகன்:—** தமிழ்ப்புலவர்களே ! எந்தை எனக்கிட்ட சாபம் இன்றுடன் தீர்ந்தது. இனி நீங்கள் ஒருவர்க்கொருவர் சண்டை சச்சரவின்றி, நீடூழி காலம் வாழ்ந்து தமிழ்மொழிக்குத் தொண்டுசெய்யக் கடவீர்கள்.

[புலவர்கள் ஸ்தோத்திரம் செய்ய, முருகக்கடவுள் மயிலின் மீது ஆரோகணித்துச் செல்கிறார்.]

(காட்சி முடிவு)



# "திருக்குறிப்புத்தொண்ட நாயனார்"



## களம் 5. காட்சி 1.

இடம்:— குடிசை

**பாத்:—** [திருக்குறிப்புத்தொண்டர், மாரியம்மை, முருகு, சிவனடியார்கள், தனவந்தர்கள்].

(குறிப்பு) [தொண்டர் மகள் "முருகு" களிப்புடன் பாடியவாறு உலர்ந்த துணிகளை மடித்து வைத்துக்கொண்டிருக்கிறாள். தனவந்தர் நல்லசாமி பிள்ளை வருகிறார்.]

**நல்ல:—**(முருகை நோக்கி) ஏ, குட்டி ... அடியே, ஒன்னைத்தாண்டி ...

**முருகு:—** (திரும்பிப்பார்த்து) என்னையா சாமீ, ஏஞ்சாமீ !

**நல்ல:—** ஒங்கப்பன் எங்கடீ ?

**முருகு:—** எங்கப்பனா ... அளுக்கெடுக்கப்போயிருக்காரு சாமி. ஏஞ்சாமி ?

**நல்ல:—** ஏஞ்சாமியா ! மாஸம் ஒண்ணாச்சு, போட்ட துணியை வெளுத்துக்குடுக்காமெ இண்ணைக்குவா, நாளைக்குவாண்ணு அலக்கழிக்கிறான், இந்த லட்சணத்திலே அளுக்கெடுக்கப்போயிட்டானோ அளுக்கு ?

**முருகு:—** ஏஞ்சாமி இப்பிடிக் கோவிச்சுக்கிறிங்க, இப்ப என்ன குடி முளுகிப்போச்சு ? ரெண்டு நாளிலே வெளுத்துக் குடுத்திட்டாரு.

நல்ல:— அப்பொ, துணியை இன்னும் வெளுக்கலேயில்லையா !

முருகு:— ஆமா சாமி. இந்த மாஸம் நம்ம ஊரு திருவிழாவுக்கு சிவனடியாருங்க ரொம்ப பேரு வந்திருந்தாங்க பாருங்க, ... அவுங்க துணிங்களை வெளுத்துக்குடுக்கிறதுக்கே நாள் சரியாப்போச்சி. இண்ணைக்கித்தான் ஒங்க துணியை வெள்ளாவி வைக்கப் போவுது. ...

நல்ல:— ஏண்டி, அப்படிண்ணு நாங்க குடுக்கிறது பணமில்லேபோலிருக்கு ... ஒட்டாஞ்சில்லு ... அப்படித்தானே ?

முருகு:—(அலட்சியமாய்) பணமா சாமி பெரிசு? ... பணம் இண்ணைக்கு வரும் நாளேக்குப்போவும் ... ஊம் ... பணமாமே ... பணம் ...

நல்ல:— சர்தான், ஒங்கப்பன் உபதேசம் போலிருக்கு ... கத்திரிக்கா மாதிரி இருந்துக்கிட்டு அதுக்குள்ள ...

முருகு:— (இடைமறித்து) ஏஞ்சாமி ! கத்திரிக்காய்க்கு இப்பிடித்தான் காலு, கையி, கண்ணு, மூக்கு, எல்லாம் மொளேச்சிருக்குமா சாமி ? அது எந்த ஊருக் கத்திரிக்கா சாமீ ?

நல்ல:— (கோபத்துடன்) சீ நாயே, எடு செருப்பை ...

முருகு:- எங்கிட்ட செருப்பு இல்லிங்களே சாமி.

நல்ல:— போருண்டி வாயை மூடு. மொளேச்சு

மூணு சுண்டைக்காய் ஆகலே ... அதுக்குள்ள பேச்சைப்பாரு ... பல்லே உதித்துப்புடுவேன் ... தொட்டா குளிக்கணுமேண்ணு பாக்கறேன் ...

(மற்றொருவர் வருகிறார்.)

**மற்றொ:—** அடடே, அந்தக்குட்டி கிட்டயா பேச்சுக்குடுத்திங்க ... அது கிட்டப்பேசி யாரு தப்பிச்சிக்கிறது ?

**நல்ல:—** இல்லேண்ணு ... ஒங்கப்பன் இருக்காணுண்ணு கேட்டேன். அதுக்குள்ள அந்தக்குட்டி என்னென்னமோ பேசுதிண்ணு ... எல்லாம் அந்தப் பய குடுக்கிற எளக்காரம் ... ... ஆமா, எது இப்பிடி ... குளிக்கவா ? ...

**மற்றவர்:—** இல்லே ... இவன் கிட்டத்தான் வந்தேன். துணி போட்டு ரொம்ப நாளாச்சு. வர்ற வழியைக்காணோம் ... ஆசாமி இருக்கானு, இல்லே, கம்பி நீட்டிட்டானுன்னு பாத்துட்டுப்போலாம்ணு வந்தேன்.

**நல்ல:—** சர்தான். நீங்களும் நம்ம கூட்டாளிதான் போலிருக்கு ...

**மற்ற:—** ஏன், ஒங்க துணியும் வல்லியா ?

**நல்ல:—** இவங்கிட்ட எப்பவும் இந்த மாரடிப் புத்தானே ...

**மற்ற:—** அட எழவே ... அப்பொ துணி இப்பொ ஆப்புடாதோ ? ... கட்டிக்கிறதுக்குக்கூட இல்லியே ...

**நல்ல:—** இவங்கிட்ட சலவை கொஞ்சம் துப் பறவா இருக்கும். அதனாலே தான் மறுபடியும் இவங்கிட்டயே போட்டுத்தொலைக்கிறது. ... (முருகை நோக்கி) ஏண்டி ! ஓங்கம்மா எங்கடீ ? ...

(முருகு வாயை ஒரு கையால் மூடிக்கொண்டு சைகை செய்தல்) ... என்னடி சொல்றே ? ...

(முருகு மறுபடியும் முன்போல் சைகை செய்ய)

... ஏண்டி. வாயடைச்சுப்போச்சா? ... வாயைத் தெறந்து சொல்லேன்.

**முருகு:—** ஏஞ்சாமி, நீங்கதானே சித்தமுன்னடி "வாயை மூடுடீ" ன்னு சொன்னீங்க. அதான் நான் வாயை மூடிக்கிட்டு கையாலேயே சாடை காமிச்சேன்.

**நல்ல:—** (மற்றவரிடம்) எப்டீ ... பாத்திங்களா வாயை !

**மற்ற:-** நாந்தான் அண்ணைக்கொருநாள் இந்தக் குட்டிகிட்ட பேச்சைக்குடுத்து மாட்டிக்கிட்டு முழிச் சிப்புட்டனே — அதுதான் பெரிய வாயாச்சே.

**முருகு:—** என் வாய்க்கென்ன சாமி ?

**நல்ல:—** தூ ... போருண்டி ... நிறுத்து ...

(தொண்டர் மனைவி மாரியம்மை வருகிறாள்.)

**மாரி:—** வாங்க சாமி வாங்க ... உக்காருங்க ...

**நல்ல:—** ஏண்டி மாரி ! ஓம்பொண்ணென்னடி ரொம்ப ரொம்பப் பேசுறாளே.

**மாரி:**— அந்தக் கழுதை கிட்ட ஏஞ்சாமி பேச்சுக்குடுத்திங்க? அது எப்பவும் அப்பிடித்தான் அப்பனைப்போல ...

**நல்ல:**– (கோபத்தோடு) வாயை அடக்கிவையுடீ. நானுகக்கண்டு சும்மாவிட்டேன். இன்னொருத்தனுயிருந்தா நாக்கை அறுத்திருப்பான் தெரியுமா? ...

**மாரி:**—ஏஞ்சாமி! என்ன சொல்லிப்புட்டா? ... (முருகை நோக்கி) ஏண்டி, என்னடீ சொன்னே?

**நல்ல:**—ஓங்கப்பன் எங்கடீண்ணு கேட்டேன்... நான் கேட்டது அவ்வளவுதான். அதுக்குள்ள அந்தப்புள்ளே கடபுடான்னு தாளிச்சுக்கொட்டுதுண்ணு!

**முருகு:**— சாமி, சாமி, இந்த மாதிரி பொய் சொல்லாதிங்க சாமி. பொய் சொன்ன வாய்க்கு போசனம் ஆப்புடாது சாமி. அம்மா! என்னைப் பாத்து கத்திரிக்கா மாதிரி இருக்கேண்ணுரு, நான் வந்து கத்திரிக்காய்க்கு இப்பிடித்தான் காலு கையெல்லாம் மொளெச்சிருக்குமா, அது எந்த ஊருக்கத்திரிக்காயின்னு கேட்டேன். இது ஒரு குத்தமா?

**மாரி:**— போரும், போரும். ஓங்கப்பன் இருக்கிற இருப்புக்கு நீயும் இப்பிடிப்பேசிஞ இந்த ஊரை விட்டே ஓடவேண்டியதுதான். போ, போ. வேலையைப்பாரு ... சாமி! கோவிச்சுக்காதிங்க ... சின்னப்புள்ளே தெரியாமச் சொல்லிரிச்சி ... கெடக்குது ... தள்ளுங்க ... ஓங்க புள்ளே குத்தம் செய்தா பொறுத்துக்க மாட்டிங்களா? ...

நல்ல:—எம்புள்ளேயாயிருந்தா உயிரோட சமாதி வச்சிப்புடுவேன்தெரியுமா?... ஆமா, துணியை இன்னும் வெளுக்கவேயில்லேயாமே.

மாரி:— ஆச்சுங்க, எல்லாம் நாளேக்குக்கொண்டாந்துடுவாரு.

நல்ல:— (கோபத்தோடு) என்னடி ஆச்சு? வரும்போதெல்லாம் ஆச்சு, ஆச்சுண்ணு, இப்பொ மாசம் ஒண்ணுச்சே.

மாரி:— எங்கே சாமி, வெள்ளியோட வெள்ளி பதினஞ்சு, சனி பதினறு, நாயறு பதினேளு, திங்க பதினெட்டு, பதினெட்டுநாதானே ஆவுது. கோவிச்சுக்காதிங்க சாமி, ஒங்க துணியை தொறைக்குத்தான் கொண்டுபோயிருக்காரு.

நல்ல:— என்னடி ஏய்க்கிறே, அவன் அளுக் கெடுக்கப்போயிருக்காண்ணு ஒம்பொண்ணு சொல்ரு, தொறைக்குப்போயிருக்காண்ணு நீ சொல்றே.

மாரி:— ஒங்க சத்தியமா தொறைக்குத்தான் போயிக்காரு சாமி.

(தொண்டர் பாடியவண்ணம் வருகிறர்)

நல்ல:— நீ கெட்டகேட்டுக்கு மாங்கொட்டைக் கொழும்புங்கற மாதிரி, இந்த லச்சணத்திலே பாட்டு வேறெ ...

தொண்டர்:— (வணங்கி) வாருங்கள் சாமி.

நல்ல:— என்னத்தடா வார்றது? "வாருங்கள் சாமி" யாம் ஐயா எலக்கண சுத்தமாத்தான் பேசறது.

மற்ற:- அகஸ்தியருடைய பேரப்புள்ளே.

தொண்டர்:- உட்காருங்கள் சாமி.

நல்ல:— ஆமா, மரியாதையிலே ஒண்ணுங் கொறைச்சல் இல்லே எங்கடா துணி?...

தொண்டர்:- சாமி! கோபித்துக்கொள்ளக் கூடாது.

முருகு:— "ஆறுதல் சினம்"

தொண்டர்:- சாமி! இந்த மாதம் "அடியார் களின்" துணிகள் அதிகமாய் வந்து விட்டது. அது தான் கொஞ்சம் தாமதம்.

(ஓர் சிவனடியார் வருகிறார்)

அடியார்:-(தொண்டரை நோக்கி) ஐயா, ஏகாலி யாரே, ஆயிற்றா?

தொண்டர்:- (வணங்கி) இதோ....

[முருகு:— ஓடிப்போய் சலவை செய்த அடியா ரின் "அங்கி"யைக்கொண்டுவர தொண்டர் அதை வாங்கி அடியாரிடம் கொடுக்கிறார்.]

... துணி போடுகிறீர்களா சாமி?

அடியார்:- இல்லையப்பா, அடியேன் அண்ணா மலைக்குப் போகிறேன்.

தொண்:— இன்றேயா ? ...

அடி:— ஆம், வரட்டுமா ? ...

[தொண்டர் கை நீட்ட அடியார் அவருக்குத் திருநீறளித்து]

... கைம்மாறு கருதாது அடியார்களுக்குப் பணி புரியும் உனக்கு ஈசன் அருள் புரியட்டும் ...

**நல்ல:—** ஆமா, ஈசன் அருள் புரிவாரு. ஏன் புரியமாட்டாரு? இலவசத்துக்கில்ல வெளுத்துக் குடுக்கிறன். ...

**மற்ற:—** (அடியாரை நோக்கி) சாமிகள் நேரே அண்ணாமலைக்குத்தான் போறேளா? ...

**அடி:—** ஆம், அப்பனே ...

**மற்ற:—** போயிட்டு திரும்பி வருவேளா? .... அப்படியே ...

(அடியார் செல்கிறார்.)

**தொண்:—** என்ன சாமி சொன்னீர்கள்?

**நல்ல:—** (மற்றவரை நோக்கி) எப்பிடீ! பாத்திங்களா, என்ன பேசாதெ நிக்கிறிங்க?

**மற்ற:—** நீங்கதான் கேக்கிறிங்களே, ஒங்களுக்கு ஏற்பட்ற வழிதான் நமக்கும்.

**நல்ல:—**சரி, சரி, இது நமக்குத் தோதுப்படாது. நீ சலவையும் பண்ணவேண்டாம். ஒரு எளவும் பண்ணவேண்டாம். துணியைக் குடுடா முதல்லே.

**தொண்:—** என்ன சாமி இப்படிக் கோபித்துக் கொள்ளுகிறீர்கள்? சிவனடியார்களின் வேலையைச் செய்துவிட்டுத் தானே இந்த வேலையைச் செய்ய வேண்டும். நான் என்ன செய்வது?

**நல்ல:—** (கோபத்தோடு) அடியார்களாவது, நுனியார்களாவது, மாஸா மாஸம் நெல்லளந்து கொட்றதிலே தவர்றதில்லே, பணத்துக்குப் பணம் வேறெ வாங்கிக்கிறே, எங்க வேலையைவிட, எலவசத் துக்கு வெளுக்கிற பண்டாரப்பசங்க வேலெ ஒனக்குப் பெரிசாப்போச்சோ ?

**தொண்:—** (காதைப் பொத்திக்கொண்டு) சிவ, சிவ, சாமி ! பண்டாரம் பண்டாரம் என்று கேவல மாய்ச் சொல்லாதீர்கள் சாமி. எனக்கு அவர்களு டைய புணிவிடைகள் தான் பெரிதே யொழிய, உங்கள் பணம் பெரிதல்ல. அவர்கள்தான் பணம். சிவபெரு மானின் அடியவர்களுக்குத் தொண்டுசெய்வது சிவ பெருமானுக்குச் செய்யும் தொண்டல்லவா ? ஈசன் அடியார்க்கடியனல்லவா, எல்லாமறிந்த தாங்கள் அறி யாதவர்களைப்போல் பேசுகிறீர்களே.

**நல்ல:—** சரி, சரி, நீ இந்த பண்டாரப்பசங்களைக் கட்டி யழுகிற வரைக்கும், ஒனக்கு நாசகாலந்தான். சோத்துக்குத் தாளம் போடப்போறே, அப்பொத் தெரியும் ...

**முருகு:—** எஞ்சாமி, மரம் வச்சவன் தண்ணி ஊத்தருன்.

**நல்ல:—** (மாரியை நோக்கி) பாத்தியாடி ஓம் புருஷனெ, பணம் பெரிசில்லையாமே ...

**மாரி:—** அவர் கொணந்தான் தெரிஞ்சிருக்கே சாமி. போவுது போங்க. ... நான் வெளுத்துக் குடுத்திட்றேன்.

**நல்ல:** — எங்கடி போறது? — கொண்டாடி துணியை, ஊரிலே வண்ணானுக்கா பஞ்சம்? ... காசு குடுத்தா ஆயிரம் வண்ணான் வாறான், இந்தப் பண்டாரப்பசங்களைவிட நாங்க கெட்டா போயிட்டோம்?

**தொண்:**— சாமி! வேண்டாம். சிவனடியார்களை என்னெதிரில் தாறுமாறாய் பேசவேண்டாம். உங்கள் துணியை வேண்டுமானால் எடுத்துக்கொண்டு போங்கள். ...

**நல்ல:**— கொண்டா துணியை ...

[மனைவி தடுத்தும் கேளாது. தொண்டர் உட் சென்று அழுக்கு மூட்டையைக் கொண்டு வந்து போட்டுவிட்டு, மற்றவரிடம்.]

... உங்கள் துணியும் வேண்டுமா சாமி.

**மற்ற:**— பின்னெ என்னடா, நீ இஷ்டப்பட்ட போது தான் வெளுத்துக் குடுக்கிறதிண்ணு, நாங்க இளிச்சு வாயங்களா? கொண்டாடா துணியை ...

[மற்றொரு மூட்டையை "முருகு" கொண்டு வந்துபோடுகிறாள்.]

(அடியார் ஒருவர் வருகிறார்.)

**தொண்டர்:**— வாருங்கள் சாமி! உங்களுக்காகத்தான் துறைக்குக் கூடப்போகாமல் காத்துக் கொண்டிருக்கிறேன்.

**அடி:**—ஆயிற்றா?

**தொண்:**— இதோ...எங்கே முருகு.

[முருகு ஓடிப்போய் அடியாரின் துணியைக் கொண்டுவந்து கொடுக்கிறான்.]

**தொண்:—** துணிபோடுகிறீர்களா சாமி ?

**அடி:—** இல்லையப்பனே. இது அழுக்கற்றது ... நான் வருகிறேன்.

**தொண்:—** சாமி சிவனடியார்களுக்கு இந்தச் சடலம் என்றென்றும் தொண்டு செய்ய அருள்புரிய வேண்டும்.

**அடி:—** நீடூழி வாழ்வாய். (செல்கிறார்.)

**நல்ல:—** ஊம், இவன் மூளையிலே அழுக்குப் புடிச்சிருக்கும் போது—இவன் துணியிலேயிருந்து எங்கே அழுக்கெடுக்கப் போறான்—

**முருகு:-** ஆமா சாமி, எங்கப்பாவுக்கு மூளையிலே அழுக்குப்புடிச்சிருக்கு, சிவனடியார்களுக்கு துணியிலே அழுக்குப் புடிச்சிருக்கு, உங்களுக்கு மனஸிலே அழுக்குப்புடிச்சிருக்கு.

**நல்ல:—**(கோபத்தோடு) டே, ஒன் "முருக்கை" முறுக்கிவை, இல்லேன்னா என்னாலே முடியாப் போனாலும் ரெண்டு பசங்ககிட்ட சொல்லி, கல்லே விட்டு அடிக்கச்சொல்லுவேன் ...

**முருகு:—** எளியாரை வலியாரடிச்சா வலியாரை சாமிஅடிக்கும் தெரியுமா ?

**மற்ற:—** ஆமா, இப்பொக்காரியம் வில்லங்கமாப் போச்சே, நான் கடைத்தெருவுக்குப் போயி, காய்கறி

வாங்கிட்டு வரலாம்னு பொறப்பட்டேன், அப்படியே இப்படி எட்டிப் பாத்துட்டு போலாம்னு வந்தா இவன் அழுக்குமூட்டையை நம்மதலேலே கட்டிட் டானே ... தம்பி, நீங்க ஒரு காரியம் செய்யுங்களேன். நம்ம வீட்டுப் பக்கமாத்தானே போறிங்க, இந்த மூட்டையை அப்பிடியே எட்டிக்குடுத்திடுங்களேன்.

**நல்ல:—** அண்ணே, நான் எம் மூட்டையை ஒங்ககிட்ட குடுக்கலாமிண்ணுல்ல நெனேச்சேன்.

**மற்ற:—** நல்ல யோசனே பண்ணினிங்க ... வாங்க, வாங்க,

[இருவரும் அழுக்குமூட்டையைத் தூக்கிக் கொண்டு செல்கிறார்கள்.]

**மாரி:—** ஆமா, பெரியமனுசங்களே யெல்லாம் இந்த மாதிரி அலச்சியம் பண்ணி தொரத்திக்கிட்டிருந்தா, பொளேப்புக்கு வளியெப்படீண்ணேன்?

**தொண்:—** அடிபைத்தியமே! நிலேயற்ற இந்த வாழ்வை எண்ணியா சஞ்சலப்படுகிறாய்? இவ்வுலகிலிருக்கும்வரை, அடியார்களுக்குத் தொண்டு செய்வது நமது கடமை. மற்றவைகளேப் பற்றி ஏன் கவலே?

**மாரி:—** ஊம், எப்பிடியாச்சும் போங்க, எனக்கென்ன?

**தொண்டர்:—** முருகு, அடியார்கள் யாராவது துணி கொண்டுவந்து போட்டார்களா?

**முருகு:—** ஒருத்தர் கூட வல்லேப்பா.

**தொண்:—** என்ன ! ஒருவரும் வரவில்லையா ? ஐயோ, அடியார்களுடைய துணியில்லாமல் துறைக்குப் போவதெப்படி ? ஒவ்வொரு நாளும் முதன் முதலில் அடியார்களின் துணியை துவைத்துவிட்டல்லவா மற்றத்துணிகளைத் துவைப்பது ... சோமசுந்தரேசா! ... சரி ... மூட்டையை எடு, போகும் வழியில் அடியார்கள் யாராவது வரக்கூடும்.

[முருகு மூட்டையைக் கொண்டுவந்து கொடுக்க அதைத் தோளில் மாட்டிக்கொண்டு பாடிய வண்ணம் செல்கிறார்.]

(காட்சி முடிவு).

## களம் 5. காட்சி 2.

**இடம்:—** நதிக்குப்போகும் வழி

**பாத்:—** [தொண்டர், அடியார் உருவில் ஈசன்]

(குறிப்பு) [தொண்டர் அடியார்களைக் காணாது வருந்திய வண்ணம் பாடிக்கொண்டு வருகிறார்.]

**தொண்:—** (தனக்குள்) என்ன சோதனையிது ! சிவனடியார் ஒருவரையுங் காணேமே. பரமேசா, நான் என்ன செய்வேன், முதலில் அடியார்களின் துணியைத் துவைக்கவேண்டுமே, அடியார்களின் துணியில்லாமல் மற்றத்துணிகளை வெளுப்பதெப்படி ? நாழிகையாய் விட்டதே. இன்னும் எங்கென்று தேடி யலைவது ? ... எல்லாம் உன் திருவருள்போல் நடக்கட்டும். ...

[தூரத்தில் ஓர் அடியார் வருவதைக்கண்டு களிப்புற்று]

... ஆஹா! ஈசன் என்னைக் கைவிடவில்லை. அதோ ஓர் சிவனடியார் வருகின்றார். என்னுடைய பாக்கியமே பாக்கியம் ...

[ஈசன் அடியார் உருவில் வர, தொண்டர் அவரை வணங்கி]

... சுவாமி! அடியேன் ...

**அடி**:— என்ன வேண்டுமப்பனே;

**தொண்**:— சுவாமீ! தங்களைக்கண்டதும் என் மனதில் என்றுமில்லாத ஆநந்தமுண்டாகிறது சாமி.

**அடி**:— அப்படிப்பட்ட அதிசயம் என்னப்பனே யிருக்கிறது நம்மிடத்தில்?

**தொண்**:— என்னவோ தெரியவில்லை. சிவபெருமானே நேரில் வந்ததுபோலிருக்கிறது சாமி.

**அடி**:— உனது பக்தி மேலீட்டால் அவ்வாறு தோன்றலாம் ...

**தொண்**:— அதிருக்கட்டும் சாமி, இவ்வளவு அழுக்கடைந்த துணியை உடுத்திக்கொண்டிருக்கிறீர்களே, அடியேனிடம் கொடுங்கள். துவைத்து உலர்த்திக்கொடுத்துவிடுகிறேன்.

**அடி**:— அப்பனே! உலகப்பற்றினை முற்றுந் துறந்து, மனத்திடத்தழுக்குறாத ஞானிகளுக்கு நாற்றமெடுத்த துணியாயிருந்தாலென்ன, கரித்துணியாயிருந்தால்தானென்ன? ... நான் பற்றற்றவன்.

**தொண்**:— சாமீ! அப்படிச் சொல்லக்கூடாது. தம்மைப்போன்ற சிவனடியார்கள் இம்மாதிரி அழுக்

கடைந்த துணியை உடுத்திக்கொண்டிருப்பதைப் பார்த்தும், பேசாமல் செல்வது மகா பாபமல்லவா:— கொடுங்கள். இன்று மாலையே கொடுத்துவிடுகிறேன்.

அடி:— அப்பனே! எனக்கிருப்பதோ இந்த ஒற்றைக்கந்தைதான். இதை யுன்னிடம் கொடுத்து விட்டு, இன்று மாலை நீ திருப்பிக்கொடுக்க முடியாதபடி ஏதாவது இடையூறு வந்துவிட்டால் இரவில் என்னால் குளிர் தாங்கமுடியாது ... வீணாய் உனக்கும் கஷ்டம், கிடைக்காவிட்டால் எனக்கும் கஷ்டம்.

தொண்:— சாமீ, இந்த ஒரு துணியை வெளுப் பதற்குள் என்ன இடையூறு வந்துவிடப்போகிறது? தாங்கள் எதுபற்றியும் கவலைப்படவேண்டாம். எந்த விதமான இடையூறு வந்தாலும் சரி, எப்படியாவது சிரமப்பட்டு இன்று மாலை உங்கள் துணியைக்கொடுத்து விடுகிறேன். இன்னுமென்ன?

அடி:— அப்பா! எவரும் எந்தக்காரியத்திலும், இப்படித்தான் முதலில் சொல்வது வழக்கம். இடை யூறு வந்துவிட்டால் நீ என்ன செய்வாய்? என்ன சாமி செய்வது, தெய்வச்செயல் இப்படியாய் விட்டது என்று சொல்லுவாய். கடைசியில் கஷ்டப்படவேண் டியவன் நானல்லவா! ...

தொண்:— சாமீ! சிவனடியாருக்குத் தொண்டு செய்வதை சிவபெருமான் தடுத்துவிடுவாரா? அந்த ஈசன் என்னைக் கைவிடவே மாட்டார். நம்புங்கள், நிச்சயமாய்க் கொடுத்துவிடுகிறேன்.

அடி:— சரி, நீ இவ்வளவு தூரம் வருந்திக் கேட்கும்பொழுது உன்னுடைய வேண்டுகோளை மறுப்பது அழகல்ல. எப்பொழுது தருவாய் ?

தொண்:— இன்று மாலையே ...

அடி:—இருட்டுக்கு முன் கொடுத்தால்போதும்.

[இடுப்பிலிருந்த ஒற்றைக்கந்தையைத் தொண்டரிடம் கொடுத்துவிட்டு]

... ஏனப்பா ! உன்னை எங்கே சந்திப்பது ?

தொண்:— தங்களிருப்பிடத்தைத் தெரிவித்தால், நானே கொண்டுவந்து கொடுத்துவிடுகிறேன். ... அதோ தெரிகிற துறையில்தான் நான் துவைப்பது.

அடி:— சரி, நானே வந்து வாங்கிக்கொள்ளுகிறேன் ...

(குறிப்பு) [தொண்டர் செல்கிறார், அடியார் புந் நகையுடன் சிவபெருமானாகத்தோன்றி மறைகிறார் ... திடீரென்று " மின்னல் " உண்டாகி இடியின் சப்தம் கேட்கிறது. தொண்டர் திடுக்கிட்டுத் திரும்பி, நான்கு புறமும் பார்க்கிறார்.]

தொண்:— ஐயையோ; என்ன கேடுகாலமிது, மழை வரும்போலிருக்கிறதே, இடியின் சத்தத்தையும் மின்னலின் வேகத்தையும் பார்த்தால், உலகமே முழுகிப்போய்விடும்போல் தோன்றுகிறதே ...

(விரைந்து செல்கிறார்.)

(காட்சி மாறுகிறது )

## களம் 5. காட்சி 3

**இடம்:— வண்ணான் துறை**

**பாத்:—** [தொண்டர், அடியார் (ஈசன்)]

(குறிப்பு) [பெருத்த மழை பெய்கிறது. தொண்டர் துணியைப் பிழிந்தபடி நிற்கிறார்] ...

**தொண்:—** பரமேசா! அடியாருக்குச் சொன்னபடி துணியைக் கொடுக்கவேண்டுமே, இது உலருவதெப்படி? ... என்னை சோதிக்கிறாயா! ... என்ன செய்யப்போகிறேன்! சொன்ன வாக்குத் தவறிவிடும் போலிருக்கிறதே ... பரமேசா, கருணாமூர்த்தி!

[தொண்டர் கண்ணீர் விட்டபடி நிற்க, மழை ஓய்கிறது, அடியார் விரைந்து வந்து.]

**அடி:—** ஓய் தொண்டரே! எங்கே ஐயா துணி? ...அப்பா, குளிர் தாங்கமுடியவில்லை, சீக்கிரம் கொடும்.

**தொண்:—** (பயத்துடன்) சாமீ!

(இடி சத்தம் கேட்கிறது)

**அடி:—** (அவசரத்துடன்) சீக்கிரம் எடுமையா. மழை வரும்போலிருக்கிறது, ஆலயம் போய்ச் சேரவேண்டும்.

(குளிரால் நடுங்குகிறார்)

**தொண்:—** சாமீ! அடியேன் பேரில் ...

**அடி:—** என்னையா, துணி யெங்கே? ... என் வாயை மெல்கிறீர்?

**தொண்:—** சாமீ, ஆடை உலரவேண்டும் ...

அடி:—ஆடை ... உலரவேண்டுமோ?... இன்னுமா உலரவில்லை? அஸ்தமனமாய்விட்டதே ஐயா, மாலையே தருவதாகச்சொன்னீரே ... ஆஹா, குளிர் பொறுக்க முடியவில்லையே ...

(நடுங்குகிறார்)

தொண்:— சாமி! துணியை வாங்கி வந்து உடனே துவைக்க ஆரம்பித்தேன். அப்பொழுது ஆரம்பித்த மழை இப்பொழுதுதான் நின்றது. துவைத்தாயிற்று, காயவேண்டியதுதான் பாக்கி.

அடி:— ஏண்டா, என்னடா கூழைக்கும்பிடு போடுகிறாய்! ... நான் தான் ஆதியிலேயே சொன்னேனே, அப்பா! என்னிடம் ஒரே துணிதானிருக்கிறது, ஏதாவது இடையூறு வந்துவிட்டால் என்ன செய்வாயென்று, ... அப்பொழுது இல்லாத தில்லுமுல்லெல்லாம் பண்ணினையே ... இப்பொழுது என் தேகம் குளிரினால் நடுங்கித்தவிக்கிறதே. நான் படுகிற அவஸ்தை உன் கண்களுக்குத் தெரியவில்லையா? ஐயோ! உயிர் போய்விடும்போலிருக்கிறதே ... அடபாவி ......

(நடுங்குகிறார்)

தொண்:— சாமி! கவலைப்படவேண்டாம். இதுவரை ஒருவரும் உபயோகிக்காத புதுத்துணிகள் சிவனடியார்களுக்கென்றே வெளுத்து வைத்திருக்கின்றேன். அவைகளிலொன்றைப் பெற்றுக்கொள்ளுங்கள். தங்கள் ஆடை உலர்ந்தவுடன் கொடுத்துவிடுகிறேன். ... இதோ கொண்டுவருகிறேன். ...

(போக முயல,)

**அடி:**— (கோபத்துடன்) உன் துணியைக் கொண்டு குப்பையில் போடு. ... ஐயோ, தாங்கமுடிய வில்லையே. ... நான் என்னுடைய ஆடையைத்தவிர, பிறருடைய ஆடை புதிதாயிருந்தாலும், வாங்கி உப யோகிப்பதில்லையே ... அது என்னுடைய கொள்கை யாயிற்றே. ... என்ன செய்யப்போகிறேன் ... பரம சிவம் ... பரமசிவம் ...

**தொண்:**— (கண்ணீர் விட்டுக்கதறி) சாமீ! நான் என்ன செய்வேன் ... என்னை மீறி மழையிடி யால் வந்த இடையூறுக்கு நான் என்ன செய்யமுடியும்? இயற்கையைத்தடுப்பது சாத்தியமா ?

**அடி:**— அட சண்டாளா! நான் முதலில் சொன்னதை யெல்லாம் மறந்து, யோக்யனைப்போல் பாசாங்கு செய்கிறாயேடா ... ஞாயமா பேசுகிறாய் ... ஞாயம்! ...

**தொண்:**— சாமீ! தாங்கள் நேரில் கண்ணாரக் கண்டும், என் மீது பழி சுமத்துவது ஞாயமா ?

**அடி:**—அட அயோக்யப்பயலே! என் துணியை யும் வாங்கி நனைத்துவிட்டு, என்னையும் இந்தக் குளிரில் பரதவிக்கவிட்டு, ஞாயம் பேசுகிறாயேடா ... சிவனடி யார்களுக்குத் தொண்டு செய்வதாக வேடம் போட்டு ஏமாற்றுகிறாயா? இந்தப் பாபம் உன்னை லேசில் விடாதடா. இதுவரையில் எத்தனை சிவனடியார்களை இப்படிப் பரதவிக்கவிட்டிருக்கிறாயோ! எத்தனை

துணிகளை மோசம் செய்திருக்கிறாயோ ! எத்தனை பேர் குளிரினால் மாண்டார்களோ ! பாவி, உனக்கு நல்ல கெதி கிடைக்காதடா ... ஐயோ, பரமசிவம், குளிர் பொறுக்கமுடியவில்லையே ...

**தொண்:**— (காதைப் பொத்திக்கொண்டு) சிவ, சிவ, ... ஐயோ ! சிவனடியார்களின் வாயிலிருந்து இப்பேர்ப்பட்ட வார்த்தைகளைக்கேட்க, நான் என்ன பாபம் செய்தேனோ ! அடியார்களின் மனதை நோகும்படி செய்வதற்கா இப்பாழும் சென்மமெடுத்தேன் ? கைலாசவாசா ! கருணைக்கடலே ! தொண்டர் குலமே தொழுகுலமென்றல்லவா நான் இதுகாறும் எண்ணி அன்புகொண்டிருந்தேன். எல்லாமறிந்த உனக்குத் தெரியாதா ? ... சொன்ன வாக்குப்படி நடவாமல் அடியார் மனம் வருந்தச் செய்துவிட்டேனே ... ஐயோ, அருமைத் திருமேனி குளிர் தாங்க முடியாது துடிக்கின்றதே. இந்த அபசாரம் செய்த இச்சடலம் இருந்து பயனென்ன ? அடியாரின் ஆடைக்குப் பதிலாக எனது உயிரையே கொடுக்கிறேன் ... அடியாரின் ஆடையைத் தோய்த்த அதே கல்லில் எனது தலையை ......

(குறிப்பு) [ஓடிப்போய் கல்லின் மேல் தலையை மோதுகிறார் ... சங்கொலி முழங்குகிறது ... கல்லினுள்ளிருந்து ஓர் "கை" வெளிப்பட்டு தொண்டரின் தலையைத்தாங்குகிறது. தொண்டர் மனமுருகிப்பாடுகிறார். கல் வெடிக்கிறது, உள்ளிருந்து சிவபெருமான் தோன்றுகிறார்.]

**சிவ:**— திருக்குறிப்புத்தொண்டரே! உமது அன்புக்கு யாம் அகமகிழ்ந்தோம். எம்மைவிட எமது அடியவர் பால் அன்பு பாராட்டி அவர்களை எம்மைப் போல் பாவித்து, தொண்டுபுரிந்தவர்களில் உமக்கிணையெவருமில்லை. அடியார்களுக்கபசாரம் செய்துவிட்டோமென்ற கவலையை விட்டுவிடும். அடியாராகத் தோன்றியது நாமே. உம்மைச் சோதிக்கவே மழையை உண்டாக்கினோம். நீர் நெடுங்காலம் பூவுலகில் வாழ்ந்து அடியார்களுக்குத் தொண்டுபுரிந்துவிட்டு, முடிவில் நம்மை வந்தடைவீர் ...... (மறைகிறார்.)

**தொண்:**— (மெய்மறந்து ஆனந்தக்கண்ணீர் சொரிய வணங்குகிறார்.)

(காட்சி முடிவு).



# "கல்யானைக்குக் கரும்பளித்த படலம்

## களம் 6. காட்சி 1.

இடம்:— அம்மன் சந்நதி

பாத்:— [அருச்சகர், பெண்டுகள், நகர மாந்தர்]

(குறிப்பு) [சில பெண்கள் "மா" விளக்கிட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கின்றனர், சிலர் கும்மி யடிக்கின்றனர், பக்தன் ஒருவன் மன முருகிப் பாடுகிறான். நகர மாந்தர் பலர் வந்து நின்று வணங்கிச் செல்கின்றனர். அருச்சகர் பூஜை செய்துகொண்டிருக்கிறார், கும்மி யடித்து முடிந்ததும், இளம் பெண்கள் சிலர் ஓர் புறமாகப் பேசுகின்றனர்.]

பார்வதி:— ஏண்டி சாவித்திரி, ஊரெல்லாம் யாரோ சாமி யாரைப்பத்தி அமக்களப்படுதே, உன் காதிலே ஏதாவது விழுந்ததா ?

நாகு:— ஆமடீ பார்வதி, நான் கூடக் கேள்விப் பட்டேன். கோவிலுக்கு வரும்போது எங்க வீட்டுக் காரர் சொன்னார்.

சாவி:— என்னடியது அமக்களம் ?

பார்:— என்னமோம்மா எனக்குத் தெரியாது, ஊரிலே யாரோ ஒரு பரதேசி வந்திருக்கிறாராம், எல்லாரும் அவரைப்பத்தி பிரமாதமாப் பேசுறாங்க.

**சாவி:—** அடே யப்பா, இதுதானு ... பொழுது விடிஞ்சா, பொழுதுபோனு, ஆயிரம் பரதேசிங்க வர்ருங்க பிச்சைக்கு ...

**பார்:—** இவர் பிச்சை யெடுக்கிற பரதேசி இல்லே யாண்டி ... என்னென்னமோ ஜாலவித்தை யெல்லாம் செய்யிருராம், பெரிய சித்தராம்.

**சாவி:—** (நகைத்து) சித்தரோ, எத்தரோ, யார் கண்டா ?

**நாராயணி:—** சே, சே, அப்பிடி யெல்லாம் சொல்லாதடி. அவர் அபார சக்தியுள்ளவராம்.

**சாவி:—** ஊம், நாமென்னத்தைக் கண்டோம் ... எந்தப் புத்திலே எந்தப் பாம்பிருக்குமோ, இந்த ஊரிலேதான் எதைத்தொட்டாலும் அதிசயம் அதிசயமாயிருக்கே.

**பார்:—** ஆமா; ... இது மீனுட்சியம்மன் அரசு பண்ற இடமில்லையா, எல்லாம் அதிசயமாத்தான் இருக்கும். ஊமைப்பிள்ளை என்று நாமெல்லாம் நினைத்துக்கொண்டிருந்த குழந்தை சுப்ரமண்யக் கடவுளாக வெளிப்படலையா ? ...

(ஒரு பெண் விரைந்து வருகிருள்.)

... வாடி மீனு ! ஏண்டி இவ்வளவு நேரம் ?

**மீனு:—** சித்தரைப் பாக்கப்போயிருந்தேன், நாழியாப்போச்சு.

**பார்:—** புதுசா வந்திருக்கிறதாச் சொல்ருங்களே, அவரைத்தானே ? ...

மீனு:— ஆமா ... நீ பாக்கலேயா? ... அடாடா, என்ன அறபுதண்டீ, ... எங்க வீட்டுக்காரருக்கு வயஸு இருபது கூட ஆகலே, அவரை திடீர்னு கெழவராக்கிட்டாருடீ.

எல்லோ:— அடாடா! அப்புறம்? ...

மீனு:— அப்புறம் என்ன, கெஞ்சிக் கூத்தாடி ஒரு வழியா சரிப்படுத்தினோம் ...

பார்:— வாங்கடி, எல்லாரும் அவரைப் பாத்துட்டு போகலாம் ...

(எல்லா பெண்டுகளும் புறப்படுகின்றனர்.)

(காட்சி முடிவு.)

## களம் 6. காட்சி 2.

இடம்:— வீதி

பாத்:-[எல்லாம் வல்ல சித்தர், நகர மாந்தர், காவலன்]

(குறிப்பு) (ஈசன், "எல்லாம் வல்ல சித்தராய்" சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டிருக்கிறார் ஆடவரும், பெண்டிரும் வந்து வணங்கிச் செல்கின்றனர் ... சித்தர் திடீரென்று பெண்டிர் சிலரை ஆடவராக மாற்றுகிறார், பின் அனைவரையும் சந்யாசிகளாக மாற்றுகிறார், சிறுவர்கள் நகைத்துக் கூத்தாடுகின்றனர். .... மறுபடியும் எல்லோரும் முன்னுருப்பெறுகின்றனர். சித்தர் ஆனந்தக்கூத்தாடியவண்ணம் மற்றும் பல அற்புதங்களைச் செய்துகொண்டிருக்கும் தருணம் ஓர் காவலன் வந்து வணங்கி,]

**காவ:**— சாமீ! பெரியவரே, தங்களை அரண்மனைக்கு அழைத்து வரும்படி மஹாராஜா கட்டளை எழுந்தருளவேண்டும்.

**சித்தர்:**— (நகைத்து) மஹாராஜாவா, யார் மஹாராஜா? ... நான் தான் மஹாராஜா ...

[சித்தர் உருமாறி "அபிஷேக பாண்டியனாக" த்தோற்றமளிக்கிறார். காவலன் பயந்து ஓடிப்போகிறான். மறுபடியும் சித்தர் தோன்றி நகைக்கிறார். சிறுவர்கள் சித்தரைச்சூழ்ந்துகொண்டு கூத்தாடுகின்றனர்.]

(காட்சி முடிவு)

## களம் 6, காட்சி 3.

**இடம்:**— அந்தப்புரம்

**பாத்:**— [பாண்டியன், அரசி, நடன மாதர், பணிப்பெண்கள்.]

(குறிப்பு) [அரசி மஞ்சத்தில் சாய்ந்தவண்ணமிருக்க, நடனமாதர் நடனம் புரிந்து செல்கின்றனர். பாண்டியன் வந்ததும் பணிப்பெண்களும் வணங்கி வெளிச்செல்கின்றனர்.]

**அரசி:**— நாதா! யாரோ ஓர் மகான் சென்ற இரண்டு தினங்களாக நமது நகரில் வந்திருக்கிறாரென்றும், அவர் மகா சித்த புருஷராயிருக்கிறாரென்றும், எனது தோழிகள் பேசிக்கொள்ளுகிறார்களே, தாங்கள் அதைப்பற்றிக் கேள்விப்படவேயில்லையா? ...

**பாண்டி:—** ஆம், நானும் கேள்விப்பட்டேன். மனதினால் நினைக்கமுடியாத அற்புதங்களை யெல்லாம் செய்கிறாராம், எவருடனும் அதிகமாகப் பேசுவதே யில்லையாம்.

**அரசி:—** நாதா ! அப்பேர்ப்பட்ட மகானை நாம் பார்க்காமலிருக்கக்கூடாது. அவரைப்பற்றிக் கேள்விப்பட்டது முதல், எனக்கும் அவர் செய்யும் ஜாலங்களைப் பார்க்கவேண்டுமென்று ஆவலாயிருக்கிறது. நமது கொலுமண்டபத்திற்கு அவரை வரவழைத்து வேடிக்கைகள் செய்யச்சொன்னால், நானும் கண்டு களிப்புறுவேன்.

**பாண்டி:—** காதலீ ! நம் நகரில் இதுவரையில் நாம் கண்ட அதிசயங்களனைத்தும் ஏதேனுமோர் காரணம் பற்றியே நிகழ்ந்திருக்கின்றன. இப்பேர்ப்பட்ட மகான் இங்கு விஜயம் செய்திருப்பதற்கும் ஓர் மகத்தான காரணமிருக்கவேண்டும். எல்லாம் நமது எம்பிரான் திருவிளையாடலென்றே என்னுள்ளத்தில் தோன்றுகிறது ... நான் அவரை அரண்மனைக்கு அழைத்து வரும்படி மந்திரியாரிடம் கூறியிருக்கிறேன் ... கூடிய சீக்கிரம் வந்து விடுவார். ...

(காட்சி முடிவு.)

## களம் 6. காட்சி 4.

**இடம்:—** தர்க்கை மண்டபம்.

**பாத்:—** [சித்தர், பாண்டியன், காவலர், மந்திரி

(குறிப்பு) [சித்தர் உட்கார்ந்து சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டிருக்கிறார் ... நகர்வாசிகள் பலர் அவர்களைச் சூழ்ந்து நிற்கின்றனர். உள்ளிருந்து "விலகுங்கள், விலகுங்கள், மஹாராஜா பாண்டிய மன்னர் வருகிறார்" என்று காவலர் கூறி வருகின்றனர், ஜனங்கள் விலகிச்செல்கின்றனர்; சிறுவர்கள் ஓடிப் போகின்றனர். அபிஷேக பாண்டியன் வந்து சித்தரை வணங்குகிறான். சித்தர் அவனை வியப்புடன் பார்க்கிறார்]

**பாண்:**— சுவாமீ! தங்களைப் பார்க்கவேண்டுமென்ற ஆவலினால் தூதுவனையனுப்பிய குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும்.

**சித்தர்:**— (நகைத்து) அதனாலென்ன?

**பாண்:**— தாங்கள் இந்நகரில் அநேக அற்புதங்களையெல்லாம் செய்ததாகக் கேள்விப்பட்டேன், தங்களுடைய வருகையால் இந்நகர் புனிதமடைந்தது. தாங்கள் எந்த ஊர்? தங்களுக்கு வேண்டியவைகளைத் தெரிவித்தால் கொடுக்கச்செய்கிறேன்.

**சித்:**— வேந்தனே! நாம் இருப்பது காசி க்ஷேத்ரம். அநேக சிவஸ்தலங்களைச்சுற்றி யலைந்து கடைசியாக இம்மை, மறுமை, இரண்டினையும் அளிக்கவல்ல ஜீவன் முக்தி க்ஷேத்ரமாகிய இம்மதுரையம்பதியில் உள்ளவர்களுக்கு வேண்டுவனவற்றை யளிக்க முன் வந்தோம். உன்னிடமிருந்து யாம் பெறத்தக்கது

ஒன்றுமில்லை. எம்மை வேண்டுபவர்கள் நினைப்பதை யெல்லாம் கொடுக்க எம்மால் முடியும். எம்மால் முடியாத காரியம் ஒன்றுமேயில்லை ...

பாண்:— (குறுநகையுடன்) அப்படியா ! உம்மால் முடியாத காரியம் ஒன்றுமேயில்லையா ! ... நல்லது, அப்படியானால் இதோ இந்தக் "கல் யானை" கரும்பைத் தின்னும்படி செய்வீரா ? அப்படிச் செய்வீராயின் நீரே எல்லாம் வல்லசித்தர் ... உமக்கு வேண்டிய பொன் பரிசளிக்கச்செய்கிறேன்.

சித்:— (நகைத்து) பரிசா ! அரசனே, மூவுலகிலும் நமக்குப் பரிசளிப்பவர்கள் கிடையாது. அன்புதான் நீ எமக்களிக்கும் பரிசு. "அன்பே சிவம்", ஆகவே, உனது அன்பை முன்னிட்டு, இதோ இந்தக் கல் யானைகள் இரண்டும் கரும்பைத் தின்னும்படி செய்கிறேன் பார்.

[கரும்பை வரவழைத்து மண்டபத்தில் செதுக்கியுள்ள கல் யானைகளிடம் கொடுக்க, இருயானைகளும் துதிக்கையால் வாங்கித் தின்கின்றது. ... பாண்டியன் பிரமிப்புற்றுக் கீழ் விழுந்து பணிகிறான் ]

பாண்:— சுவாமீ ! தாமே எல்லாம் வல்ல சித்த புருஷர். தமது மகிமையை உணராது சாதாரண ஜாலவித்தைக்காரராக மதித்த எங்களெல்லோரையும் மன்னிக்கவேண்டும். அறியாது மோசம் போனோம்.







சிவசக்தி நட ன்த்தில் சில தோற்றங்கள்

எங்களைக் கரையேற்றவந்த தெய்வம் தாங்களே யென்பதிலேயமில்லை.

**சித்:**— அபிஷேக பாண்டிய மன்னனே! உனது அன்பு எம்மைப் பரவசப்படுத்திவிட்டது. இது சமயம் உனக்கு விருப்பமுள்ளவற்றைத் தெரிவித்தால் தடையின்றிக்கொடுக்கிறேன். எது வேண்டினும் கேள்.

**பாண்:**— சுவாமீ! தம்போன்ற பெரியோர்களிடத்தில் அன்பும், எங்கள் குலதெய்வமாகிய சோமசுந்தரப்பெருமான் மீது பக்தியும் தவிர, எனக்கு வேண்டியது ஒன்றுமில்லை. நான் எந்த ஜென்மமெடுத்தாலும், எத்தனை பிறவி யெடுத்தாலும், இதுவே என்றென்றும் மாறுதிருந்தால் போதும். ... சுவாமீ! ... எம்பெருமானின் திருநடனத்தைக்காண ஆவல் கொண்டேன். அத்திருக்காட்சியை எனது கண்கள் கண்டுகளிக்குமாறு அருள்புரியவேண்டும்.

**சித்:**— மன்னனே, எம்பிரானின் நடனத்தையா பார்க்கவேண்டும்? காண்பதெல்லாம் அவன் திருக்கூத்துத்தானே...அவன் ஆடுகின்றான், உலகமும் ஆடுகின்றது, ஜீவர்களும் ஆடுகின்றனர் ... இதோ பார் ...

(குறிப்பு) [இருள் சூழ்கின்றது, சித்தர் மறைகின்றார் ... "**சக்தி சிவ நடனக்காக்ஷி**" தென்படுகிறது சங்கொலி முழங்குகிறது ... நடனம் முடிந்ததும், மறுபடியும் இருள் சூழ்ந்து விலக, சிவபெருமான் காட்சியளிக்கிறார். பாண்டியன் ஆநந்தக்கண்ணீர் சொரிய கீழ் விழுந்து வணங்குகிறான்.]

சிவபெரு:— ஹே, அபிஷேக பாண்டியா! நீயும் உனது குலத்தாரும் எம்மிடத்து வைத்துள்ள அன்பின் மிகுதியினாலேயே யாம் சித்தராக வந்து உனக்கருள் புரிந்தோம். நீ இந்த அரச பதவியைத் துச்சமென மதித்து, அதைவிட பக்தியே பெரிதெனக்காட்டியது எம்மைப் பரவசப்படுத்தியது. இனி நீ புத்திரப் பேற்றினை யடைந்து நீடூழி வாழ்ந்து நமது பதம் அடைவாயாக ...

(மறைகிறார்.)

(காட்சி முடிவு.)



# " சர்பந் தீர்த்த படலம். "



## களம் 7 காட்சி 1.

**இடம்:**— வலையர் குடில்

**பாத்:**— [வலையர்க்கரசன், வலைஞர்கள்.]

(குறிப்பு) [வலைஞர்க்கரசன் ஓர் ஆசனத்திலமர்ந் திருக்க, வலையர்கள் ஆடவரும் பெண்டிருமா கச்சேர்ந்து நடனம் புரிகின்றனர் ... நடனம் முடிந்ததும் சில வலைஞர் ஓடி வந்து அரசனை வணங்கி],

**1-வது வலை**— மகாராசா! எங்க படகெல்லாம் போச்சு மகாராசா, நீங்கதான் காப்பாத்தணும்.

**அர:**— என்ன சமாசாரம்? ...

**2-வது:**– முன்னாடியே சமுகத்திலே எத்தனையோ வாட்டி சொல்லியும் சமுகம் அதைக் கவனிக்கலேங் களே மகாராசா ...

**அர:**— என்ன அது? ...

**1-வது வலை:**— அதான் மகாராசா, அந்த சொறு மீனு பண்ற அக்குறும்புதான்.

**அர:**— இன்னும் வலை வீசிப் பிடிக்கவில்லையா அதை? ...

**3-வது வலை:**— வலையா! எந்த வலையை வீசி னாலும் தான் அதம் பண்ணிப்புடுதே, சுக்குநூறாப் போயிடுதே வலை ...

**2-வது வலை:**—கட்டுமரத்தைக் கவுக்கிறதும், காலைப்புடிச்சி இசுக்கிறதும், வலைங்களை நொறுக்கிறதும், வாலை வீசி அடிக்கிறதும், அப்பாடா ... எங்களாலே பொறுக்கமுடியலே மகாராசா ...

**1-வது வலை:**— அது கடலுக்குள்ளாற பேர்டுற சத்தம் கரையிலே இடி யிடிச்சாப்பிலே கேக்குதுங்களே.

**அர:**— உங்களில் அதைப் பிடிக்கும் திறமுடையவர்கள் ஒருவருமே யில்லையா ?

**2-வது வலை:**— நாந்தான் தகிரியமா புடிக்கப் போயி தப்பிச்சிவந்ததே பெரிசாப்போச்சே மகாராசா.

**அர:**— (சற்று யோசித்து) ஊம், நான் உங்களைப் போல் வாலிபப் பருவத்திலிருந்திருந்தால் இம் மீனை வெகு சுலபத்திலடக்கியிருப்பேன் ... என்ன செய்வது ? ... மலை போன்ற அலைகளின் மேல் தாண்டிக் குதிக்கும் பருவமாயிது ? ... வெகுநாளாகப் புத்திரப் பேறின்றி வருந்திக்கொண்டிருந்த என்பால் சோமசுந்தரப்பெருமான் கருணை கூர்ந்து ஓர் பெண் குழந்தையை மரத்தடியில் காண்பித்து இதுதான் உன் பாக்யமென்றார் ... கடவுளருளிய அக்குழந்தை மங்கைப்பருவமடைந்திருக்கிறாள். அவளுக்குத் தக்க நாயகன் கிடைக்கவேண்டுமே யென்று நான் ஏற்கனவே கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறேன். இந்த நிலைமையில் இச்சுறாமீன் செய்கிற அட்டூழியங்களால் நமது தொழிலுக்கே ஆபத்து வந்துவிடும் போலிருக்கிறதே ...

**1-வது வலை:—** மகாராசா! நாங்க எல்லாரும் முயற்சி பண்ணிப்பாத்துட்டோம். காரியம் சாயலைங்க.

**2-வது வலை:—** மகாராசா! இந்த சொறாமீனு நம்ப கடல்லே இருக்கிற வரைக்கும் கடல்லேருந்து ஒரு சின்ன மீனைக்கூட எங்களாலே புடிக்க முடியாது மகாராசா. நாங்க எங்கேயாவது ஓடிப்போறோம்.

**அர:—** வலையர்களே! சொக்கநாதப்பெருமான் நம்மைக் காப்பாற்றுவார். கவலைப்படாதீர்கள் ... நான் கடைசியாக என்து இருகவலைகளும் தீர ஓர் முடிவு செய்துவிட்டேன். ... இந்த க்ஷணமுதல் எவனொருவன் அந்த சுறாமீனைப் பிடித்துக்கொண்டு வருகிறானோ, அவனுக்கு என் மகளைத் திருமணஞ் செய்து கொடுக்கிறேன் ... இச்செய்தியை எல்லோருக்கும் அறிவித்துவிடுங்கள்.

**வலை எல்லோரும்:—** (ஆர்ப்பரித்து) ஆ! ... ரொம்ப நல்லது மகாராசா, அதாஞ் சரி ...

**2-வது வலை:—** அம்மாளைக் கட்டிக்கணும்னு ஆயிரம் பேரு எனக்கு ஒனக்கின்னு முன்னாலே வாறாங்களே, ... வரட்டும், சொறாமீனு கிட்டக் காட்டட்டும் தகிரியத்தை. அதாஞ்சரி, அதாஞ்சரி ...

**அர:—** நாளை காலை நாமும் ஓர் முறை முயற்சி செய்து பார்ப்போம்.

**2-வது:—** (பயந்து) ஐயையோ, வேண்டாம்

மகாராசா

அர:— அப்படியல்ல, நாமெல்லோரும் ஒருங்கு கூடி முயற்சித்தால் ஒரு வேளை பிடிபடக்கூடுமல்லவா.

எல்லோரும்:— உத்தரவு ...

1-வது வலை:— அண்ணே! மகாராசா நாளைக்கி சொறுமீனைப் புடிக்கணும்ணு சொன்னவுடனே ... எனக்கு ஒடம்புக்கு ஒரு மாதிரி யிருக்கண்ணே ...

(காட்சி முடிவு).

## களம் 7. காட்சி 2.

இடம்:— கடற்கரை

பாத்:— [கயற்கண்ணி, அம்பா, வலையர்கள், வலைச்சியர், அரசன், வலையனுருவில் ஈசன்]

(குறிப்பு) [கயற்கண்ணி, அம்பா முதலிய தோழியருடன் "நொண்டி" விளையாடிக்கொண்டிருக்கிருள், ஒருவரும் பிடிபடாமலிருக்க, அலுத்துப்போய் கீழே உட்கார்ந்து]

கயற்:— அப்பா, காலெல்லாம் வலிக்கிறதடி. ஊஹூம் ... இந்த விளையாட்டு வேண்டாம்.

ஒருத்தி:— "மாது மாது" விளையாடலாமா? ...

கயற்:— அதுதான் நித்தம் விளையாடுகிறோமே.

மற்ருருத்தி:— "கழல்" விளையாடுவோமா ?

கயற்:— போடீ ... எனக்குப் பிடிக்கவில்லை ...

அம்பா:— அம்மா, கண்ணைக்கட்டி விளையாடலாமா? ...

**கயற்:**— (குதித்தெழுந்து) ஆ! நல்ல விளை யாட்டுடீ ...

**ஒருத்தி:**— மொதல்லே யாரு கட்டிக்கிறது? ...

**கயற்:**— யாராவது ஒருத்தி கட்டுங்களேண்டி. இதோ அம்பா கட்டிக்கொள்வாள்.

**அம்பா:**— ஏம்மா, நீங்கதான் கட்டுங்களேன்.

**கயற்:**— சரி ... வேண்டாம் ... ஒன்றிலிருந்து பத்து வரை எண்ணுவேன், யார் பத்து வருகிறளோ அவள் தான் கட்டவேண்டும் ... சரிதானு ? ...

**மற்ற:**— அதான் சரி ... எண்ணுங்க ...

[கயற்கண்ணி தனக்குள் எண்ணிப் பார்க்கிறள்.]

**அம்பா:**— ஊம் ... அதெல்லாம் கூடாது. எண்ணிப்பாக்கிறீங்களேம்மா ...

**கயற்:**— இல்லே, இல்லே ...

[கயற்கண்ணி எண்ணுகிறள், அம்பா பத்தா வதாக வர, மற்றவர் நகைக்கின்றனர்.]

**அம்பா:**— போங்கம்மா, மொதல்லேயே எண்ணிப்பாத்துக்கிட்டிங்க ...

**கயற்:**— போடீ ... கட்டுடீ. ...

[அம்பாவின் கண்ணைக் கட்டிவிட்டு மற்றவர் அவள் தலையில் குட்டிவிட்டு பிடிபடாது ஓடுகின்றனர் ]

**கயற்:—** அடியே! ஒருத்தியாவது அகப்படக் கூடாது தெரியுமா?

[சிறிது நேரஞ் சென்றபின் "கயற்கண்ணி" பிடிபட்டுவிட, மற்றவர் நகைத்து, கேலி செய்கின்றனர்.]

**கயற்:—** (புன்னகையுடன்) வேறு விளையாட்டு விளையாடலாமாடி?

**அம்பா:—** ஊம்... அதெல்லாம் முடியாது... ஏமாத்தப் பாக்கிறீங்களா? கட்டுங்கம்மா கட்டுங்க...

(கயற்கண்ணியின் கண்ணைக்கட்டுகிறார்கள்.)

**கயற்:—** அடியே அம்பா, மெதுவாகக் கட்ட வேண்டும் தெரியுமா...

[ஒருத்தியும் பிடி கொடாமல் விளையாட, முடிவில் கயற்கண்ணி "வலையனுருவில் எதிர் வந்த ஈசனை" ப்பிடித்துக்கொண்டு]

... ஆ, அகப்பட்டுக் கொண்டாயாடி ...

[கண்ணைக்கட்டியிருந்த துணியை அவிழ்த்துப் பார்க்க, ஓர் இளைஞன் நிற்பதைக்கண்டு விலகுகிறாள். மற்றவர் நகைக்கின்றனர்.]

**வலைஞன்:—** (நகைத்து) ஆஹா, நன்றாய் அகப்பட்டுக்கொண்டேன். மிகவும் சாமர்த்தியசாலி ... எப்படியோ கண்டுபிடித்துவிட்டாயே ...

**கயற்:—** (கோபத்துடன்) யாரையா நீர்? இளம் பெண்கள் தனித்து விளையாடுமிடத்திற்கு உம்மை யார் வரச்சொன்னது?

**வலைஞன்:**— நானு வந்தேள் ?

**கயற்:**— ஊம் ... நீர் வரவில்லை ... உம்முடைய கால் வந்தது.

**வலைஞன்:**– அப்படியானுல் என் காலையல்லவோ கேட்கவேண்டும், என்னைக் கேட்பானேன் ?

**கயற்:**— பார்த்தாயாடி அம்பா ! காலைக் கேட்க வேண்டுமாமே ... அடியே, வாயால் கேட்டால் கால் பதில்சொல்லாது...கையால் தாண்டி கேட்கவேண்டும்.

**வலைஞன்:**— ஆஹா, உன் அழகிய கை என் காலின் மீதுபட நான் எவ்வளவு புண்ணியம் செய் திருக்கவேண்டும். ...

**அம்பா:**— (முன் வந்து) என்னையா இது, ஏன் வந்தீங்கண்ணு கேட்டா, இல்லாததெல்லாம் பேசுறிங் களே, வந்த வழியைப் பாத்துக்கிட்டு போறிங்களா, இல்லே ...

**வலைஞன்:**— நான் என்ன செய்வது ? அவள் அழகாகிய காந்தம் இரும்பாகிய என் மனத்தைத் தானே இழுத்துக்கொண்டது. அது என் குற்றமா, அவள் அழகின் குற்றமா ? ...

**கயற்:**— ஆஹா, நன்றுயிருக்கிறதையா ... உல கத்தில் எல்லாந்தான் அழகாயிருக்கிறது, எதெதை எந்தெந்த இடத்தில் வைத்துப் பார்க்கவேண்டுமோ, அப்படிப் பார்த்தால் தான் நல்லது. நெருப்பு அழகா யிருக்கிறதென்று கையால் தொட்டால், என்னுகும் தெரியுமா ?

**வலேஞன்:—** நெருப்பாயிருந்தால் தான் இந் நேரம் எரித்து சாம்பலாக்கியிருக்குமே, இது வெப்பந் தீரத் தங்குவதற்கேற்ற, குளிர்ந்த நிழலாகவல்லவா யிருக்கின்றது.

**அம்பா:—** போதுமையா நிறுத்தும். ஏது வர வர வாய் மிஞ்சுதே. நரிக்கு எளக்காரம் குடுத்தா அது கெடைக்கு ரெண்டாடு கேக்குமாம் ...

(மற்ற பெண்கள் நகைக்கின்றனர்.)

**கயற்:—** அவரென்னடி செய்வார்; ... அந்த வாலிப முறுக்கு அவரை இப்படியெல்லாம் பேசச் சொல்லுகிறது. ...

**வலேஞன்:—** ஆஹா, கண்மணி! ...

**கயற்:—** (இடை மறித்து) என்ன அது! கண் மணியாவது, மூக்குமணியாவது? ... ஏண்டி இவருக் குப் பைத்தியம் கியித்தியம் புடித்திருக்குமோ? ... ஐயோ பாவம் சின்ன வயசு. அம்பா! போடீ யாராவது நல்ல வைத்தியரைக் கூட்டிக்கொண்டுவா. ...

(மற்ற பெண்கள் நகைக்கின்றனர்.)

**வலேஞன்:—** (குறுநகையுடன்) ஆம், பைத்தியந் தான் ... சாதாரணமான பைத்தியமல்ல. பெண் பைத் தியம் ... இதற்கு வைத்தியர் வரவேண்டியதில்லையே. மருந்து உன்னிடம் தானே யிருக்கிறது. நீதான் மருந்து கொடுக்கவேண்டும்.

**அம்பா:—** "அப்பிடி வாடி தப்பிடி நாச்சியாரே" ண்ணுங்களாம், பாத்திங்களாம்மா வாத்துடுக்கை. ...

**வலைஞன்:**— பெண்ணே! தவறான காரிய மொன்றும் நான் செய்துவிடவில்லையே. நீயோ கன்னிப் பெண், நானோ மணமாகாத இளைஞன். உன் மீது நான் ஆசை கொண்டது இயற்கைக்கு விரோதமான காரியமல்லவே. உன்னைத் தேடித்தான் நான் வந்து கொண்டிருந்தேன். நீயே ஓடி வந்து என்னைப் பிடித் துக்கொண்டாய் ... என் மனம் உன்னிடமிருக்கிறது. ... நான் என்ன செய்ய முடியும்? ...

**கயற்:**— சரி, சரி, உம்மை ஆறே முக்காலும், அரையுங் காலும், சேர்த்துப் பிடித்திருக்கிறது. அத ஞல் தான் இப்படிப் பேசுகிறீர் ...

**அம்பா:**— ஏய்யா! மருவாதியா போறிங்களா, ஆளுங்களைக் கூப்பிடட்டுமா?

**வலைஞன்:**— யார் வந்து என்னை என்ன செய்ய முடியும்? ... என் பெண்டாட்டியோடு நான் பேசு கிறேன், எந்தப்பயல் கேட்க வருவான்?

(அம்பாவின் கணவன் "மூக்கன்" வருகிறான்.)

**அம்பா:**— (மூக்கனிடம்) இந்தா பாரு, இந்த ஆளு இங்கே வந்து என்னென்னமோ தாறுமாறாப் பேசுறான் ... என்ன வேணும்ணு கேளு ...

**மூக்:**— உங்கிட்டையா பேசினான்?

**அம்பா:**— இல்லே அம்மா கிட்ட ...

**மூக்:**— இரு, ஆம்பிளைங்களைக் கூட்டியாறேன்.

[ஓடுகிறான். அம்பா அவனைப்பிடித்து நிறுத்தி.]

**அம்பா:**— ஆமா, நீ ஆம்பிளேயில்லியா ? வெக்கக் கேடுதான்.

**மூக்கன்:**— (தலையைச் சொறிந்துகொண்டு, வலேஞனை உற்று நோக்கி)

... யாரையா நீ ? ஒன்னைப்பாத்தா ராசாவூட்டுப் புள்ளேமாருதியிருக்கே, ஒனக்கேன் இந்தப் புத்தி ? ... மருவாதியா நடையைக் கட்டுறயா, இல்லே ... உசிரை உட்றியா ?

[தடியை எடுத்துக்கொண்டு அடிக்க முயல்பவன்போல் நெருங்குகிறான் ]

**கயற்:**— (தடுத்து) அண்ணு ! வேண்டாம், வேண்டாம். அவரைக் கொன்றுவிடாதே. பாவம், பிழைத்துப்போகட்டும்.

**மூக்கன்:**— கொல்லவேண்டாமா ... நெஜமா சொல்லுங்க ... சரி போ...பொழைச்சே இண்ணேக்கி.

[கயற்கண்ணி கடைக்கண்ணுல் வலேஞனை நோக்குகிறாள்.]

**வலேஞன்:**— அட போடா, அவளுக்கும் எனக்கும் வெகுநாளாகவே நேசமுண்டுடா. அவள் என் பெண்டாட்டிடா, கேட்டுப்பார். அவளே விட்டு விட்டு நான் எங்கே போவது ?

**மூக்:**— (வியப்புற்று கயற்கண்ணியை நோக்கி) ஏம்மா, நெசமாவா ?

**கயற்:**— ஐயையோ, வீண் அபாண்டம். எல்லாம் பொய். வேண்டுமென்றே சொல்கிறான்.

மூக்:— ஏண்டா! பொய்யா சொன்னே! ...

[கைத்தடியால் வலேஞனை ஓங்கி யடிக்க, வலே ஞன் மறைந்துவிடுகிறுன். மூக்கன் அடித்த அடி மூக்கன் உட்பட எல்லோர் பேரிலும் படுகிறது. எல்லோரும் தந்தம் முதுகைத் தடவுகிறுர்கள்.]

அம்பா:— (மூக்கனை நோக்கி) அட சீ, குறியைப் பாரு, குறியை ... கண்ணு அவிஞ்சா போச்சு? என்னையேன் அடிச்சே?

கயற்:— என் முதுகிலேயும் பட்டுவிட்டதண்ணு.

மற்றவர்:— இந்தா பாருங்கம்மா எங்க முது வுலே பட்டிருக்கு ...

மூக்:— இன்னும் சொல்றவங்கல்லாம் சொல் லுங்க ... நான் அடிச்ச அடி தவறி எம் முதுவுலேயே பட்டுடிச்சி, ... (நான்கு புறமும் பார்த்து) அந்தப் பயலைக் காணமே ... பெரிய மந்திரவாதியாயிருப்பான் போல யிருக்கே ... திடீர்னு மறைஞ்சிட்டானே ... சரி, மகாராசா கிட்ட இந்த சமாசாரத்தைச் சொல்லிப் புட்டு வாறேன்.

(போகமுயல, கயற்கண்ணி தடுத்து)

கயற்:— வேண்டாம். அப்பா ஏற்கனவே வருத் தத்தோடிருக்கிறுர், இதைச் சொல்லவேண்டாம். பாவம், பிழைத்துப்போகட்டும். (பெண்களை நோக்கி) அடியே, இந்த விஷயத்தைப்பற்றி ஒருவரிடமும் ஒன் றும் சொல்லப்படாது. தெரியுமா? ...

**அம்பா:—** (கண் சிமிட்டியபடி) சர்தான் ... ஆசாமி சொக்குப்பொடியைத் தூவிட்டுப்போயிட்டான் போலயிருக்கு

**கயற்:—** (புன்னகையுடன் அவள் கன்னத்தைக் கிள்ளி) போடி ...

**அம்பா:—** ஒங்க கண்ணைப் பாக்கும்போதே தெரியுதேம்மா.

**கயற்:—** (ஓர் புறமாய்) அடி அம்பா ! அவரைப் போல் அழகுள்ளவரை நீ எங்கேயாவது பார்த்திருக்கிறாயாடி ? ...

**அம்பா:—** அந்த அதிஷ்டம் எனக்கேதம்மா (மூக்கனைச்சுட்டி) எனக்குத்தான் இந்தக் கரிக்கட்டை வந்து வாச்சிருக்கே.

**மூக்:—**அம்மா, பாருங்கம்மா, ஒங்க எதிருக்கவே மருவாதியில்லாதெ பேசுறு ...

**கயற்:—** (அம்பாவிடம்) அடி யம்பா ! அவரைக் கண்டது முதல் என் மனதில் என்னையுமறியாமல் ஓர் ஆநந்தமுண்டாகிறதடி, இழந்த பொருளை மீண்டும் கண்டது போன்ற உணர்ச்சியுண்டாகிறது, அவரை இதற்கு முன் எங்கேயோ பார்த்த ஞாபகமுண்டாகிறது. ... அவர் எனக்குக் கிடைப்பாராடி ? ...

**அம்பா:—** உங்களுக்கேற்ற புருஷரம்மா, ... ஆனா, சொறுமீனைப் புடிக்கணுமே ... அதோ எல்லாரும் வந்துட்டாங்க.

**கயல்:**— அடியே! அப்பாவிடம் ஒன்றும் சொல்லப்படாது. என்மேலாணை. ...

**அம்பா:**— நாங்க ஏம்மா சொல்லப்போறோம்? (மூக்கனிடம்) இந்தா பாரு, உன் ஓட்டை வாயை மாத்திரம் தெறந்திடாதே. ...

**மூக்:**— நான் ஒருத்தர் கிட்ட சொல்லவே மாட்டேன். ...

(மற்றும் பல வலைஞர்கள் வருகின்றனர்.)

**ஒரு வலை:**— ஊம் ... இண்ணைக்கு சொறாமீனு எத்தனை பேரை 'வவுத்துக்குள்ள போட்டுக்கப் போவுதோ? ... அட கடவுளே!

**மற்றொரு:**— அண்ணே! நான் எம்பொஞ்சாதி கிட்ட வாக்கரிசி வாங்கிக்கிட்டு வந்துட்டேன்.

**மூக்கன்:**— ஊம், ஏன் இப்பிடி பயந்து சாவுறிங்க? ஆறிலேயும் சாவு, நூறிலேயும் சாவுண்ணு இருக்கும்போது என்ன பயம்? உசிரு போனா போவுது, நான் இருக்கேன்.

**ஒருவன்:**— டே நீ சூரப்புலிதான், தெரியுண்டா, நிறுத்து.

**மூக்கன்:**— (ஓர் புறமாய்) பின்னே என்னண்ணே, பொம்பளே குட்டிகளுக்கு எதிருக்க நம்ப கோளைத்தனத்தைக் காமிச்சா சிரிச்சுப்புட மாட்டாங்க ...

[வலையர்க்கரசன் வர எல்லோரும் வணங்குகின்றனர்]

அரசன்:— எல்லாம் சித்தமாயிருக்கிறதா ?

மூக்கன்:—எல்லாஞ் சித்தமாயிருக்கு மகராசா. ஆனா, நாமு இன்னைக்குப்போறது அவ்வளவு நல்லதாத்தெரியலே ...

அரசன்:— ஏண்டா பயப்படுகிறாய் ? ...

மூக்கன்:— பயமில்லிங்க...நெஞ்சுக்குள்ளதான் ஒரு மாருதியா ...

ஒருவன்:— மகராசா, காத்து ஒரு மாருதியா வரும்போல யிருக்கே ...

அரசன்:— எப்படி யிருந்தாலும் சரி ... கயற்கண்ணி ! ...

கயற்:— ஏனப்பா, இதோ இருக்கிறேன்.

[தந்தை யருகில் வந்து நிற்கிறாள்... தூரத்தில் வரும் ஓர் அழகிய வலைஞனை எல்லோரும் பார்க்கின்றனர், அரசனும் பார்க்கிறான்.]

அரசன்:— யாரது ? ... வலைஞர்களே, நம்மை நோக்கிவரும் அச்சுந்தர புருஷன் யார் ? அவனைப் பார்க்கும் பொழுதே என் மனதில் ஆநந்தமுண்டாகிறதே.

ஒருவன்:— ஆஹா ! எம்பிட்டு அழகாயிருக்காண்ணே ...

மற்றொரு:–நம்ப சாதிக்காரனுத்தான் தெரியுது.

(குறிப்பு) [மூக்கன், அம்பா, முதலியோர் பார்த்து முன்பு வந்து மறைந்த வலைஞனை யிருப்பதுகண்டு திகைப்புற்று, கடைக்கண் ணியை நோக்க, அவள் ஒன்றும் சொல்லக் கூடாதென்று சைகை செய்கிறாள். வலைஞன் அருகில் வருகிறான்.]

அரசன்:-(அவனை நோக்கி) தம்பி! நீ யாரப்பா? எங்கள் குலத்தவனைக் காணப்படுகிறாய்...எங்கிருந்து வருகிறாய்? ... இவ்வூருக்கு வந்த விசேடமென்ன?

வலைஞன்:— நீங்கள் நினைத்தபடி நானும் வலை யர் குலத்தவன்தான். நான் ஓர் சிற்றரசரின் புதல்வன். சிலநாட்களாகத் தேச யாத்திரை செய்து வருகிறேன். இவ்விடத்தில் பெருங்கூட்டம் நிற்பது கண்டு என்ன வென்று விசாரித்துப் போகலாமென்று வந்தேன்.

அரசன்:— அப்படியா! தம்பி, இங்கே கரை யோரத்தில் ஒரு பெரிய "சுறாமீன்" இருந்துகொண்டு மிகவும் கஷ்டத்தைக் கொடுக்கிறது. அதைப் பிடிப் பதற்கு நாங்களெல்லோரும் இன்று முயற்சி செய்யப் போகிறோம்.

வலைஞன்: — (நகைத்து) ஒரு மீனைப் பிடிப்ப தற்கு இத்தனை பேரா!

மூக்கன்:—இன்னும் கொஞ்சப்பேர் வேணும்...

அரசன்—தம்பி, அது சாதாரணமான மீனல்ல, அநேகம் பேரைக் கொன்றுவிட்டது. ஒருவராலும் பிடிக்கமுடியவில்லை.

**வலைஞன்:—** ஹூம், அப்படியும் ஒரு மீனிருக்கிறதா?

**மூக்கன்:—** போய் பாத்தாத்தெரியும் ...

**அரசன்:—** அந்த மீனைப் பிடித்துக்கொடுப்பவர்களுக்கு என் புதல்வி கயற்கண்ணியை மணஞ்செய்து கொடுப்பதாய் தெரிவித்திருக்கிறேன்.

**ஒருவன்:—** ஒரு ஆசாமியாவது இன்னும் வல்லே.

**அரசன்:—** உம்மால் முடியுமா?

**வலைஞன்:—** ஊம், இந்த மீனைப் பிடிக்கவா ... வெகு சுலபம் ... கடலின் நடுவில் எவ்வளவு ஆழமான இடத்திலிருந்தாலும், எப்படிப்பட்ட மீனுயிருந்தாலும், கண் மூடித் திறக்குமுன் அதைக் கரையில் கொண்டுவந்து சேர்க்க என்னுல் முடியும். மண் மீனை மட்டுமல்ல, விண் மீனைக்கூட வலைவீசிப் பிடிக்க என்னுல் முடியும்.

**மூக்கன்:—** இதை விட பேசறதுக்கு என்னுலேயும் முடியும்.

**ஒருவன்:—** போறு திரும்புறதேது? ...

**மற்றொருவன்:—** ஐயோ பாவம் சின்ன வயசு ...

**வலைஞன்:—** சீ கோழைகளே! ...

**மூக்கன்:—** ஆஹா, ரொம்ப தகிரியசாலிதான்.

**வலைஞன்:—** குலத்தின் பெயரையே கெடுத்து விடுவீர்கள் போலிருக்கிறதே.

**மூக்கன்:—** (மற்றொருவனை நோக்கி) அண்ணே! இவர் தான் இப்பொ கொலத்தைக் காப்பாத்தப் போறாரு ... ஊம் ...

**அரசன்:—** அடே என் வீண் சண்டை ... முடிந்தால் பார்க்கட்டுமே ...

**வலைஞன்:—** (கயற்கண்ணியை நோக்கியபடி) "காற்றிலேறியவ் விண்ணையுஞ்சாடுவோம், காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே ... நூற்றிரண்டு மலைகளைச்சாடுவோம், நுண்ணிடைப்பெண்ணொருத்தி பணியிலே" ... இதோ பாருங்கள் ... அந்த சுறுமீன் தானே வந்து சரணடைவதை.

[கையை அசைக்க உள்ளிருந்து பேரிரைச்சலுடன் "சுறுமீன்" எழும்பி கரைக்கு வருகிறது, எல்லோரும் பயந்து ஓடுகிறார்கள்.]

**வலைஞன்:—** பயப்படவேண்டாம், பயப்பட வேண்டாம் ...

**அரசன்:—** (பிரமித்து) ஐயா, புண்ணியவானே! உமது சக்தியை என்னென்று கூறுவேன்! எவராலும் முடியாத பெருஞ்செயலைப் புரிந்தீர். நமது குலத்தின் பெருமையைக் காப்பாற்றினீர். ...

(எல்லோரும் வணங்குகின்றனர்.)

... யான் வாக்களித்தபடி எனது புதல்வியை இதோ உமக்களித்தேன். ...

[கயற்கண்ணியின் கரத்தைப்பிடித்து வலைஞனின் கரத்தில் கொடுக்கிறார்.]

... என்னது இருப்பிடத்திற்கு எழுந்தருளி திருமண முடித்துக்கொண்டு செல்லவேண்டும் ....

(குறிப்பு) [இருள் சூழ்ந்து விலக, வலைச்சியாக விருந்த உமாதேவியும், சுறாமீனாகவிருந்த நந்தியும், சாபம் நீங்கப்பெற்று எம்பிரானை யடைகின்றனர். சமுத்திரம் மறைந்து கைலாயம் தோன்றுகிறது. வலைஞனாக வந்த "சிவபெருமான்" ரிஷபாரூடராகக் காட்சியளிக்கிறார்.]

(காட்சி முடிவு.)

முற்றிற்று.

மங்களம்.



ஸ்ரீ ராமகிருஷ்ண பிரஸ், மதுரை:—41.